


" இன்னமும் யோசிக்காதீங்க மாமி! 'ஒன் மேன்' பார்ட்டிதான்! "

தனித்தன்மை வாய்ந்த
இவரது தணியாத விருப்பம்
'ப்ளெயின்' ஷர்ட்டிங் மட்டும் அணிவதே

அதாவது மஃபத்லால் வழங்கும்
பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர்
ப்ளெண்டுகளின் ஷர்ட்டிங்.

அவருக்கென ஒரு தனி பாணி, தனி ரசனை.
பறைசாற்றமாட்டார், என்றும் பவ்வியமாக இருப்பார்.
தனக்கே உரிய தனித் தோற்றத்தை வலியுறுத்துவார்.

மஃபத்லால்
ஷர்ட்டிங்



MF-124-TAM

# பரதமும் பலவித பாணிகளும்

ஆனந்தி

இந்த ஆண்டு இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் திருமதி பாலசரஸ்வதி தலைமை தாங்குகின்றார்; பரோடா பல்கலைக் கழகத்தில் நுண்கலைக் கல்லூரி முதல்வராக விளங்கும் திரு சந்திரசேகர் கிருஷ்ணகான சபையில் நிருத்திய சூடாமணி பட்டம் பெறுகிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் பரத நாட்டியக் கலையை வழி வழியாகக் காப்பாற்றி வந்துள்ள சில நாட்டியக் கலைக் குடும்பங்களையும் அவர்களுடைய பாணிகளையும் நன்றியோடு எண்ணிப் பார்க்கலாமே...

தற்காலத்தில் பல்வேறு கலைஞர்களுடைய பாணிகளைப் பற்றிப் பேசி வருகிறார்கள். சில நேரங்களில் தவறான செய்முறைகள் கூடப் பாணி என்ற பெயரில் நியாயப்படுத்தப்பட்டு விடுகின்றன.

மொத்தமாகப் பார்த்தால் இன்று நாம் பார்த்து மகிழும் பரத நாட்டியக் கலைச்செல்வத்தைச் சென்ற இருநூற்றைம்பது வருட காலத்தில் வளர்த்துக் காப்பாற்றித் தந்திருப்பது தஞ்சை மாவட்டமே. பந்தநல்லூர் பாணி, வழுவூர் பாணி, தஞ்சாவூர்ப் பாணி எல்லாவற்றுக்குமே தஞ்சை மாவட்டம்தான் உறைவிடம்.

நாட்டியக் கலையை வகைப்படுத்திக் கச்சேரி செய்யும் முறையை அமைத்து, அடவுகள், பழகு முறையை வகுத்துப் பெருந் தொண்டு செய்தவர்கள் தஞ்சை நால்வர் என்று அழைக்கப்பட்ட பொன்னையா பிள்ளை சகோதரர்கள். இவர்கள் நால்வரும் செய்திருக்கும் கலைத் தொண்டுகளை எவ்வளவு பாராட்டினாலும் போதாது. தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்களாலும், மைசூரை ஆண்டுவந்த அரசராலும் திருவாங்கூர் மன்னராலும் கொண்டாடப்பட்டவர்கள் இவர்கள். நாட்டியத்துக்காகவே ஏராளமான உருப்படிகளை இயற்றியிருக்கிறார்கள். இன்று பாட்டுக் கச்சேரிகளில் மிக முக்கியமான இடத்தைப் பெற்றுவிட்ட வயலின் வாத்தியத்தை முதன் முதலில் வாசித்துப் பழகியவர் திரு வடிவேலு. இந்தச் சகோதரர்கள் இசை, நாட்டியம், வாத்தியம் மூன்றுக்குமே பெருந் தொண்டு செய்திருப்பது குறிப்பிடத் தக்கது. ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரின் சீடர்களாக இருந்து இசை பயிலும் வாய்ப்பும் இவர்களுக்குக் கிடைத்தது.

இப்படிப்பட்ட பரம்பரையில் வந்தவர் திருமதி பாலசரஸ்வதியின் குருவான கந்தப்ப பிள்ளை.



✖ ருக்மிணிதேவி-சேகர் வரைந்த 40 ஆண்டுகளுக்கு முற்பட்ட சித்திரம். நன்றி: ஆனந்த விகடன்.



✖ பாலசரஸ்வதி



✖ கமலா, வழுவூர் ராமையா பிள்ளை, ராதா

ஸ்ரீ கந்தப்ப பிள்ளையும் அவருடைய முன்னோர்களும் ஓதுவார் வம்சத்தைச் சேர்ந்தவர்களானபடியால் இசை அவரது நரம்புகளில் ஓடிற்று. இவருடைய தமையனார் திரு சுப்பராய பிள்ளை ஹரிகதை செய்து வந்தார். திரு கந்தப்ப பிள்ளையும் உடன் பாடி வந்தார். இருவரும் தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயத்தில் சேவகம் செய்து வந்தார்கள். மேதையான கந்தப்ப பிள்ளையவர்கள் மிருதங்கம் வாசிப்பார். பல்லவி பாடும் அளவுக்கு ஞானம் உள்ளவர். மைக் இல்லாத காலத்தில் நாலரைக் கட்டைச் சுருதியில் பாடுவார்கள். சுருதிப் பெட்டி எல்லாம் கிடையாது. துத்தி என்ற வாத்தியத்துடன் சாரீரம் சேர வேண்டும். அதன் சத்தத்துக்கு மேலே குரல் கேட்க வேண்டும். இப்படி நாட்டியம் சம்பந்தப்பட்ட லயம், இசை, நட்டுவாங்கம் எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினார் திரு கந்தப்ப பிள்ளை.

இப்படிப்பட்டவரிடம் வீணை தனம்மாளின் பேத்தியான பால ஸரஸ்வதி நாட்டியம் பயில வந்து சேர்ந்தார். கேட்க வேண்டுமா? சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தது போலாயிற்று.

இசையோடு சேர்ந்து பாவத்தையும் ரஸத்தையும் குழைத்துத் தருபவர் திருமதி பால சரஸ்வதி என்பதை எல்லோரும் அறிவோம். ராகம்தான் பாவத்துக்கு ஆதாரம் என்று கருதுபவர் அவர். அவருடைய அன்னையார் திருமதி ஜெயம்மாளின் வளம் மிகுந்த சாரீரத்தில் ஜாவேளியைக் கேட்டவர்கள் இதை மறுக்கவே முடியாது.

நாட்டிய இசையில் வார்த்தைகள் அதிகமாக இருக்கக் கூடாது. பொருளழகும், இசையழகும், கையழகும் பிரிக்க முடியாதபடி ஒன்றி ரஸாபிநயமாகப் பெருகுவது இந்தப் பாணியின் தனிச் சிறப்பு. பொருள் ஆழம் மிகுந்த பதங்களுக்குக் கைபிடிப்பது



✖ கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்

ஓர் அழகு. ஸ்வரங்களின் அமைப்புக்கும் லயத்துக்கும் தகுந்தபடி கோர்வைகளைச் சேர்ப்பது ஓர் அழகு. இசையில் ஈடுபாடுள்ளவர்களால்தான் அவ்வாறு பொருத்தமாகச் சேர்க்க முடியும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த தஞ்சைப் பாணியின் தன்னிகரில்லாத் தலைவியாக விளங்குகிறார் ஸ்ரீமதி பாலசரஸ்வதி.

**ப**ரத நாட்டியக் கலைக்கு இந்த நூற்றுண்டின் மத்தியில் ஒரு தனி மதிப்பு ஏற்படக் காரணமாக இருந்தவர் பந்தநல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. அவரிடம் நாட்டியம் பயின்றவர்கள் நாடு முழுவதிலும் ஒரு புதிய விழிப்புணர்வை ஏற்படுத்தினார்கள்.

திருமதி ருக்மிணி தேவி, திருமதி மிருணாளினி சாராபாய் இவர்களெல்லாம் நாட்டியக் கலைக்குச் சமூகத்தில் ஒரு கௌரவத்தைத் தேடித் தந்தார்கள்.

பந்தணைநல்லூர் ஜெயலக்ஷ்மியின் அதிசயிக்கத்தக்க நாட்டியத்தை இன்னும் பலர் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதையடுத்து திருமதி கௌஸல்யா நாராயணன், நிர்மலா ராமச்சந்திரன் முதலியோர் அந்தப் பாணியில் அவருடைய மருமகனை திரு சொக்கலிங்கம் பிள்ளையிடம் கற்றுப் பேரும் புகழும் அடைந்தார்கள்.

திரு மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மேதமையைப் பற்றி நிறையக் கேள்விப் பட்டிருக்கிறோம். பல நடைகளில் தீர்மானங்கள் சேர்ப்பதிலும், வர்ணங்கள் தில்லானாக்கள் முதலியன கற்றுத் தருவதிலும் இணையற்றவர் என்று அவரிடம் பயின்றவர்கள் கூறுகிறார்கள்.

பந்தணைநல்லூர்ப் பாணியில் அங்க சுத்தத்துக்கே முதலிடம். அடவுகள் மின்னல் ஒளி விடுவது போல் பிரகாசிக்கும். ஒவ்வொரு ஜதியும் பாதங்களில் பேசியே ஆகவேண்டும். பூசி மெழுகுவது என்பதே கிடையாது. நட்டுவாங்கமும் அப்படியே சுத்தம். அழுத்தமும் அங்க சுத்தமும் பூரண வடிவம் பெற்ற அடவுகளும் சேர்ந்த சம்பிரதாயமான பாணி.

இன்று பிரபலமாக விளங்கி வரும் கலாக்ஷேத்திரம் அஹமதாபாத்திலுள்ள தர்பணா முதலிய நாட்டியப் பள்ளிகளில் அடவுகளின்

✻ பத்மா சுப்ரமணியம்



செய்முறை தீர்மானங்கள் முதலியன இந்தப் பாணியிலேயே பெரும்பாலும் கற்றுத் தரப்படுகின்றன.

தற்காலத்தில் பெண்மணிகள் பலர் நட்டுவாங்கம் செய்கிறார்கள். நல்ல சுச்சிருதத்துடன் சரியான உச்சரிப்புடன் கம்பீரமாக ஜதிகளைச் சொல்லி நாட்டியத்துக்கு உதவுகிறார்கள்.

ஆயினும் நட்டுவனார்கள் ஆண்மை நிரம்பிய கனத்த குரலில் மேல் ஷட்ஜமத்தில் கொனிப்பு என்று கூறப்படும் ஜதிச் சொற் கட்டுக்களை அடுக்கடுக்காக மூன்று காலங்களில் வல்லினம் மெல்லினம் கொடுத்து கார்வைகளை அமைத்து நட்டுவாங்கம் செய்வது காதுகளுக்கு ஒரு நிறைவைத் தருகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. இந்த அம்சம் வழுவூர் பாணியில் மிகச் சிறந்திருப்பதைக் காண்கிறோம்.

வழுவூர் ஸ்ரீ ராமையா பிள்ளை அவர்கள் தீர்மானங்களைச் சொல்லுவதே ஓர் அழகு. கணீரென்ற குரலில் சொற் சிதைவு இல்லாமல் அளவான கார்வைகளுடன் காதுக்கு ரம்யமான த்வனியில் அவர் ஜதிகளையும் தத்தகாரங்களையும் சொல்லும் போது ஆடுபவருக்கே ஒரு தனி உற்சாகம் பிறந்துவிடும்.

1940ம் ஆண்டுக்குப் பின் சென்னைமாநகரிலும் பொதுவாகத் தமிழ்கூறும் நல்லுலகத்திலும் ஏற்பட்ட ஒரு கலை மறுமலர்ச்சியை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டவர் திரு ராமையா பிள்ளையவர்கள்.

இவருடைய முன்னோரான சாமு நட்டுவனார் அவர்கள் மிகவும் பிரசித்தி பெற்றவர். இவர்களைப் பற்றிய விவரங்களைக் கல்வெட்டுகளில்கூடக் காணலாம்.

வழுவூர் பாணி நாட்டியத்தில் நளினம் உண்டு. பாவச் செறிவும் உண்டு. திரிபங்கி என்று இப்போது பலரும் கூறுகிறார்கள். இந்த நிலை பெண்களுக்கு அழகை அளிக்கும். அதை அளவோடு உபயோகிப்பது வழுவூர் பாணி. அடவுகளை ஒரே மாதிரி செய்யாமல் ¨பிரித்தும் சேர்த்தும் புதிதாக அமைப்பதும் உண்டு.

குழந்தைகளுக்கு ஏற்ற பாடல்கள், யுவதிகளுக்கு ஏற்ற பதங்கள் என்றெல்லாம் பிரித்துக் கற்றுக் கொடுப்பதில்லை இவர். எத்தனை கடினமான பாவத்தையும் எந்த வயதினரும் செய்வதுதான் சிறப்பு என்றும், சொல்லிக் கொடுப்பதில்தான் இருக்கிறது என்றும் நம்புகிறவர் திரு ராமையா பிள்ளை.

இவரிடம் பயின்று பேரும் புகழுமாக விளங்குபவர்கள் எத்தனையோ பேர். ஸ்ரீமதி கமலா, ஸ்ரீமதி வைஜயந்தி மாலா, பத்மா சுப்பிரமணியம், ஸ்ரீமதி சித்ராவிச்வேச்வரன் என்றுஅடுக்கிக் கொண்டே போகலாம். நாட்டியம் ஆட நான்கு வருடங்களில் பயிற்சி அளிக்க முடியும். நட்டுவாங்கம் பழக பன்னிரண்டு ஆண்டுகள் தேவை என்று கருதுகிறார் திரு ராமையா பிள்ளை அவர்கள்.

பம்பாயில் ராஜராஜேஸ்வரி நாட்டிய கலாமந்திர் என்ற பள்ளியை நிறுவிப் பற்பல நாட்டிய மணிகளை உருவாக்கி வருகிறது ஒரு கலைக் குடும்பம்.

சமீப காலத்தில் மறைந்துபோன திரு குப்பையா நட்டுவனார், திருவிடைமருதூர் பஞ்சாபகேச நட்டுவனாரின் மகன். திரு பஞ்சாபகேச நட்டுவனார் ராமநாதபுரம், தஞ்சை பரோடா மூன்று சமஸ்தானங்களிலும் ஆஸ்தான வித்வானாக விளங்கியவர். அபிநய நவநீதம் என்ற நூலை எழுதி வெளியிட்டவர். இப்போது ராஜராஜேச்வரி பரத நாட்டிய கலா மந்திரை திரு குப்பையா பிள்ளையின் மருமகனை திரு கோவிந்தராஜ பிள்ளையும் அவரது துணைவியார் திருமதி கருணாம்பாளும் நிர்வகித்து நடத்தி வருகிறார்கள். திரு குப்பையா பிள்ளையின் புதல்வர்களான திரு கல்யாணசுந்தரம் பிள்ளை, திரு மகாலிங்கம் பிள்ளை இருவரும் நாட்டியம் பயில்வித்து வருகிறார்கள்.



✻ வாணி கமல்

இவர்களுடைய எழிலான பாணி தஞ்சாவூர் பாணியை ஒத்தே இருக்குமென் கூறலாம். அங்க சுத்தமும் அழுத்தமும் நிறைந்து, அபிநயமும் சிறந்து விளங்குவது இவர்களுடைய பாணியின் சிறப்பு.

சுதா துரைஸ்வாமி, வாணி மீரா சகோதரிகள், லதா நீலகண்டன், ராணி அனந்த் முதலியோர் இவர்களிடம் பயின்று ஆடிப் புகழ் பெற்றவர்கள்.

**க**லா க்ஷேத்திர பாணி என்று சிறந்த கலா ரசிகர்களால் கொண்டாடப்பட்டு வருகிற வழி முறையில் சில தனிச் சிறப்புக்களைக் காண்கிறோம்.

ஆத்மீக ஞானத்தை வளர்த்து மனிதனை இறைவனருகில் கொண்டு சேர்ப்பதே கலை. அதுவும் நாட்டியக் கலையை மிகவும் எச்சரிக்கையுடன் இறையுணர்வை நெஞ்சில் நிறுத்திக் கொண்டே பயில வேண்டும். இல்லாவிட்டால் ரஸமே விரஸமாகிவிடும் அல்லவா?

நாட்டியக் கலை ஒரு தெய்வ ஆராதனை என்ற உணர்வை இளம் உள்ளங்களில் பதிய வைத்துவிட்டால் பிறகு அது உன்னத நோக்கத்துடனேயே செயல்படத் தொடங்கி விடும். இதைச் செய்வதே கலாக்ஷேத்திராவின் முக்கிய பணியாகவும், பர்ணியாகவும் இருக்கிறது.

கலாக்ஷேத்திர நாட்டிய நாடகங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் மனிதனை உயர்த்துவதாக இருக்கிறது. தவிர நாட்டியத்தை அரங்கத்தில் அளிக்கும்போது பலவித உத்திகளைக் கையாள்வதில் கலாக்ஷேத்திரம் முன்னோடியாக விளங்குகிறது. கண்களைக் கூசச் செய்யும் ஒளியில் பளபளக்கும் ஆடையாபரணங்களுடன், கண்களைப் பறிக்கும் வண்ண ஆடைகளை அணிந்து நாட்டியமாடி வந்த முறைகளை மாற்றிய பெருமை திருமதி ருக்மிணி தேவிக்கு உண்டு.

கண்களுக்குக் குளுமையான போதுமான அளவு ஒளி, இரைச்சல் இல்லாத அளவான ஒலிப்பெருக்கி அமைப்பு, பகட்டற்ற பட்டாடைகள், பண்புள்ள அணிமணிகள், நமது பண்பாட்டை எடுத்துக் காட்டும் காட்சிகள், ஆடம்பரமில்லாத அரங்கம், தமிழ் நாட்டின் மிகச் சிறந்த வித்வான்கள் அமைத்துக் கொடுத்த இசை, பல வருட உழைப்பினால் மெருகேறிய நாட்டியம் இவற்றையெல்லாம் ஒருங்கே காண்பது ஒரு தனி அனுபவம்.

இன்று நாட்டியமாடி வரும் புகழ்பெற்ற நடன மணிகள் பலர் கலாக்ஷேத்திரத்தில் பயின்றவர்கள். யாமினி, ஸம்யுக்தா பாணிக்ராஹி இருவரும் கூட முதலில் கலாக்ஷேத்திரத்தில் பரத நாட்டியம் பயின்று தேர்ச்சியடைந்தவர்களே. கிருஷ்ணவேணி லக்ஷ்மணன், வி. காயத்ரி, லீலா சாம்ஸன், சுபலக்ஷ்மி அம்ஜத்கான், இந்திரா பருவா முதலியோர் திருமதி ருக்மிணி தேவியிடம் பயிற்சி பெற்றவர்கள்தான்.

இன்று தனி நாட்டியப் பள்ளிகள் நடத்தி வரும் அடையாறு லக்ஷ்மணன், பரத கலாஞ்சலி சாந்தா-தனஞ்செயன் முதலியோரும் கலாக்ஷேத்திரத்தில் பயின்றவர்களே!

பரோடா பல்கலைக் கழகத்தின் நுண்கலைக் கல்லூரியில் கலாக்ஷேத்திரத்தில் பயின்று தேர்ச்சி பெற்றவரான திருமதி அஞ்சலி மெஹர் பணியாற்றி வந்தார். அவரது மறைவுக்குப் பின்னர் இந்த ஆண்டு கிருஷ்ண கான சபையினால் நிருத்ய சூடாமணி பட்டம் வழங்கிக் கௌரவிக்கப்படுகிற ஸ்ரீ சந்திரசேகர் கல்லூரி முதல்வராக விளங்கிப் பணியாற்றி வருகிறார். இவர் சிறு வயதிலேயே கலாக்ஷேத்திரத்தில் சேர்ந்து நாட்டிய நாடகங்கள் பலவற்றில் பங்கெடுத்துக்கொண்டு சிறப்பாக ஆடித் தேர்ந்தவர்.

பாணிகள் என்று நாம் மேம்போக்காகச் சொல்லுகிறோமே தவிர ஆடுபவரைப் பொறுத்தே கலையின் சிறப்பு அமையும். எத்தனையோ வர்ணங்கள் இருக்கின்றன. ஓவியத்தின் சிறப்பு எத்தனை வர்ணங்களைப் பூசினோம் என்பதிலா இருக்கிறது?

## கால்களில் சிலம்பு கொஞ்ச...

ஆகாரம், தண்ணீர், தூக்கம் இவை எதுவுமே வேண்டாம், 'தோடி' ராகத்தை 'சோமு' பாடக் கேட்டுக் கொண்டிருந்தால்! ஏன்? வாழ்க்கையில் எனக்கு வேறெதுவுமே வேண்டாம்; இதைக் கேட்டுவிட்டு அடுத்த நிமிடமே நாம் செத்துவிடக் கூடாதா என்று ஒவ்வொரு சமயம் தோன்றும். பூஜை, தியானம் இவற்றில் வேண்டினாலும் கிடைக்காத ஒருமைப்பாடு இதில் தானாகவே கிடைக்கும்.

மந்த்ர ஸ்தாயி கீழ் ஷட்ஜமத்திலிருந்து தார ஸ்தாயி மேல் ஷட்ஜமம் வரை, இவர் குரல் விந்தை புரியும்போது,' மேடையில் ஒரு மனிதர்தான் பாடுகிறார் என்பதை நம்புவது சிரமமாக இருக்கிறது.

ஆலாபனை முடிந்து, ''தாயே யசோதா'' ஆரம்பித்து, சரணத்தில் நான்கு காலங்களில் நிரவல் செய்யும்போது கால்களில் சிலம்பு கொஞ்ச, கண்ணன் தெரு வாசலில் நடந்து வருவது நம் கண்களில் தெரியும்.

இதையெல்லாம் எழுத்தில் சொல்லி என் மனத்தை வெளிப்படுத்த முடியவில்லை. அனுபவித்தவர்களுக்குத்தான் புரியும்!

ஆர். கேதார் (ராஜாராம்)



# எங்கள் சுழல் முதலீட்டுத் திட்டத்தில் சேர்ந்து பயன் அடையுங்கள்





நீங்கள் செலுத்தும் பணம் காலப்போக்கில் எவ்வாறு பிரமிக்கத்தக்க முறையில் பெருகும் என்பதைப் பாருங்கள்

| முதலீட்டுத் தொகை ரூ. | திரும்பப் பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 36 மாதங்கள் ரூ. பை. | 60 மாதங்கள் ரூ. பை. | 120 மாதங்கள் ரூ. பை. |
| 1000 | 1345.00 | 1639.00 | 2685.50 |
| 5000 | 6725.00 | 8195.00 | 13427.50 |
| 10000 | 13450.00 | 16390.00 | 26855.00 |

உங்கள் அருகாமையிலுள்ள எங்கள் கிளையை அணுகி உங்களுக்குப் பணிபுரிய எங்களுக்கு வாய்ப்பு அளியுங்கள்.




## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: கரூர் 639 001
நிர்வாக அலுவலகம்: சென்னை 600 086

அன்னியச் செலாவணி
வர்த்தகம் செய்ய
அங்கீகரிக்கப்பட்ட வங்கி

என். முத்தியாலு
ஜெனரல் மானேஜர்

என்.வி. ஸ்ரீநிவாசன்
சேர்மன்

# சங்கில் சங்கீதம்

சங்கு ஊதும் மற்ற எல்லோரும் சங்கில் ''ஓம்'' என்ற ஓசையுடன் ஊதுகிறார்கள். அவ்வளவுதான். அதற்கு மேல் அவர்களால் அதில் இசை எழுப்ப முடிவதில்லை. ஆனால்

○ டி. எஸ். மகாலிங்க குருக்கள்



டி. எஸ். மகாலிங்கக் குருக்கள் தருந்த பக்க வாத்தியங்களுடன் இருபது வருடங்களாகக் கச்சேரியேசெய்கிறார். ஆதலால் இந்தியாவில் சங்கு மூலம் இன்னிசைக் கச்சேரி நடத்தி வருவது மகாலிங்கக் குருக்கள் ஒருவர் தான் என்று நமக்குத் தெரிய வர ஆச்சரியப்படுகிறோம்.

ஐந்து ஆண்டுகள் முறையாக வேதம், ஆகமம் ஆகிய சாஸ்திரங்களைப் பயின்று, திருவாரூர் ஸ்ரீ தியாகராஜப் பெருமான் கோயிலில் நடைபெறும் விழாக்களில் சங்கு வாத்தியத்தை வாசித்து இறைவனுக்கு சேவை புரிந்து வருகிறார் இவர்.

சங்கு மூலம் இசை நிகழ்ச்சி நடத்த வேண்டும் என்ற ஆர்வம் எப்படி ஏற்பட்டது என்பதற்கு அவர் கூறும் பதில்:

''திருவாரூர் கோயிலில் சுத்த மத்தளத்துடன் (தோல் வாத்தியக் கருவி) சங்கு தான வாத்தியமாக வாசிக்கப்படுவதைக் கேட்டு சங்கு மூலம் இன்னிசை எழுப்பலாம் என்ற யோசனை 1958ஆம் ஆண்டு எனக்குத் தோன்றியது. ஏற்கனவே எனக்கிருந்த இசை அனுபவத்தைக் கொண்டு சங்கு வாத்தியத்தில் ஐந்து வருஷ காலம் தீவிரப் பயிற்சி செய்து மேடையில் சங்குக் கச்சேரி நடத்தத் தொடங்கினேன்.

சங்கு கால்ஷியம் சத்து நிரம்பியுள்ளதால் அதனை நீண்ட நேரம் வாயில் வைத்து ஊதுவதற்கில்லை. அதனால் சங்கிற்கு முன்புறம் வெண்கல மூடி போட்டு உலோகக் குழல் பொருத்தியிருக்கிறேன். பின்புறம் அன்னப் பறவையின் வால் போன்ற உலோக இறகினையும் பொருத்தி யிருக்கிறேன்'' என்று



# சுதாவின் கதா

(வளரும் கலைஞர்)

படிப்பிலும் கட்டி, பாட்டிலும் கெட்டி என்றால் சுதா வேங்கடராமன்தான்.

இசை உலகில் துரிதமாகப் பிரபலமடைந்து வரும் இந்த இளம் பாடகி சென்னை சர்வ கலாசாலையில் பொருளாதாரப்பட்டதாரி. மதுரை பல்கலைக் கழகத்துக்கும் கொஞ்சம் பெருமை சேரட்டுமே என்பது போல்

தன் சங்கு வாத்தியத்தைப் பற்றி விளக்குகிறார் மகாலிங்கக் குருக்கள்.

பிடில், மிருதங்கம், நாதசுரம், மேளம், புல்லாங்குழல், வீணை முதலிய பக்க வாத்தியங்களுடன் கர்னாடக கீர்த்தனைகள் மட்டுமின்றி ஹிந்துஸ்தானி சங்கீதமும் இசைக்கும் இவர் டில்லி, பம்பாய், கல்கத்தா, அலகாபாத், காசி மற்றும் பல வடநாட்டுநகரங்களிலும் கச்சேரிகள் நடத்தியிருக்கிறார். வெளி நாடுகளிலும் தனது சங்குக் கச்சேரியை நிகழ்த்தியிருக்கிறாராம் இவர்.

- என். வி. ஆர் ஸ்வாமி

# முகநாயனம்

**வா**யால் விசில் அடிப்பதைப் பார்த்திருக்கிறோம். நாதசுரம் வாசிப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? இதோ, குடந்தை ஜெயராமன் வாசிக்கிறார். தன்னுடைய குரலினாலேயே இச்சாதனையைச் செய்யும் இவர் இதற்கு 'முகநாயனம்' என்று பெயரிட்டிருக்கிறார். இதுவரை 170க்கும் மேற்பட்ட கச்சேரிகளைச் செய்திருக்கிறார் - தவில், வயலின் போன்ற பக்க வாத்தியங்களுடன்!

1964ல் உறவினர் ஒருவர் ஒத்து ஊதுவது போல வேடிக்கைக்குச் செய்திருக்கிறார். அதிலிருந்து இவருடைய கற்பனை விரிந்து பெரும் நாதஸ்வரக் கச்சேரி அளவுக்கு இவரைக் கொண்டுவந்து விட்டிருக்கிறது.

• திருப்பதி ஏழுமலையான் சந்நிதானத்தில் 'முகநாயனம்' வாசித்ததன் அருளாக திருச்சானூரில் காஞ்சிப் பெரியவரைச் சந்தித்திருக்கிறார். அவர் தனது பரிவட்டம் ஒன்றை அன்புடன் கொடுத்து, முறைப்படி சங்கீதம் கற்றுக்கொண்டு வாசிக்கச் சொன்னாராம். ஆச்சரியாரின் கட்டளைப்படி சரளி வரிசை தொடங்கி முறையாக இசை பயின்றிருக்கிறார். வெகு விரைவில் முழுக் கச்சேரி செய்யும் அளவுக்குத் தேர்ச்சி பெற்றுவிட்டார்.

அடிக்கடி ஜலதோஷம் வருவதை வாசிப்புக்கு உதவுவதாகக் கூறி வரவேற்கும் ஜெயராமன் பயப்படுவது இருமலும் வந்து இடையூறு செய்து விடுமோ என்றுதான்!

இவருடைய லட்சியமே திருவையாறு தியாகராஜ உத்சவத்தில் தான் மேடை ஏற வேண்டும் என்பதுதான். இவருக்குச் சீடர்கள் யாரும் இதுவரை தோன்றவில்லை. இவர் புகழ் பரவி, இனிமேல் சிஷ்யர்கள் வரக்கூடும்.

—ஜனார்த்தனன்



○ குடந்தை ஜெயராமன்

எம். ஏ. பொருளாதாரப் பட்டத்தை அங்கே பெற்றார்.

எத்திராஜ் கல்லூரியில் படித்தபோது தொடர்ந்து மூன்று ஆண்டுகள் தலைசிறந்த மாணவி என்று தேர்ந்தெடுக்கப்பட்டது அதற்கு முன் யாரும் கண்டிராத சாதனை.

கல்வியை விட்டுக் கலைக்கு வந்தாலோ இங்கும் சாதனைப் பட்டியல்தான். முதலில் தாயார் சூடாமணி வேங்கடராமனிடமே சிட்சை. பிறகு பி. வி. லட்சுமணனிடம் சில காலம் பயிற்சி.

மத்திய அரசின் மான்யம் பெற்று எம்.எல்.வி. யிடம் வந்து சேர்ந்தார் சுதா. அவரது பல கச்சேரிகளில் உடன் பாடுகிறவராய் விளங்கி அயல் நாடுகளுக்கும் சென்று வந்தார்.

நான்கு ஆண்டுகளாகத் தனிக் கச்சேரிகளும் செய்து வருகிறார். சென்ற ஆண்டு அகாடமி விழாவில் சாம்பசிவஅய்யர் பரிசைத் தட்டிச் சென்றார். அகாடமிக்கு மட்டும் சுதா தனிச் சலுகை காட்டவில்லை. தமிழிசை, இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ், கிருஷ்ணகான சபை அ. இ. ரே. போன்ற எதற்கும் வஞ்சனை செய்யாமல் அனைத்திலும் பரிசு பெற்றுக் குவித்திருக்கிறார்!

சுதாவின் லேட்டஸ்ட் வெற்றி செம்மங்குடி டிரஸ்ட்டின் முதல் மான்யத்தைப் பெற்றிருப்பது. டி. எம். தியாகராஜனிடம் இனி இசைப் பயிற்சி தொடரும்.

சுதாவின் கதை நீளுகிறது. ஒளிர்கின்ற ஒளிமயமான எதிர்காலத்தை நோக்கி.

தகவல்: பட்டாபி
கட்டுரை வடிவம். குட்டி கிருஷ்ணன்


போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துக்குவோம்...
காதிலே விழலே!
போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துக்குவோம்..
காதிலேயே விழல்லையே!
போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துக் குவோம்..
காதிலேயே விழல்லையே!


டோக்கன் வந்தாச்சு, சாப்பாடு போடு!


பஞ்சாயத்து தேர்தல்கள்
தனியா தான் நிக்க விரும்புகிறோம்!

# குழப்பத்தின் மறுபெயர் இந்தியா!

ஒரு புறம்: அம்பேத்கார் நினைவு நாள் கொண்டாட்டம்; தலைவர்கள் பங்கேற்பு. மறுபுறம்: ஹரிஜனங்களும் சில ஆதிவாசிகளும் சேர்ந்து கூட்டுறவு முறையில் ஆரம்பித்துச் சிறப்பாக நடத்திய நிலக்கரி சுரங்கத்தைக் கருணையின்றி பீகார் அரசு மூடி ஸீல் வைத்து 250 பேர்களைக் கைது செய்த கொடுமை!

நேற்று: ''கள்ளச் சாராயத்தை ஒழிக்கவே மது விலக்கைத் தளர்த்துகிறேன்'' என்றார் முதல்வர் எம்.ஜி.ஆர். இன்று: ''கள்ளச் சாராயம் ரொம்ப அதிகமாகிவிட்டது. இதை ஒழித்தே ஆகவேண்டும்'' என்கிறார் அமைச்சர் எஸ். டி. எஸ்.

விலைவாசி குறையப் போகிறது; குறைந்து கொண்டிருக்கிறது; இதோ, குறைந்தே விட்டது! – ஆர். வி.யின் வழக்கமான பல்லவி. ரயில்வே சரக்குக் கட்டணங்களை மறுபடியும் பதினைந்து சதம் உயர்த்தியுள்ளதால், மிக அதிகமான விலைவாசி உயர்வால் பாதிக்கப்படப்போவது தென் மாநிலங்களே! – நமது சமீபத்திய தலைவலி.

பகைமைப் புரட்சி பற்றி ரேகன் பாராட்ட இந்திரா பெருமிதம் – கான்கன் சந்திப்பின் போது பகிரங்க அகவல். ஆஸ்திரேலியாவிலிருந்து 1.5 மிலியன் டன் கோதுமை இறக்குமதியாக ஏற்பாடு - இப்போது அம்பலமாகியுள்ள ரகசியத்தகவல்.

வரவு: ஐயாயிரம் கோடி ஐ.எம்.எஃப் கடன். செலவு: மூவாயிரம் கோடி மிராஜ் போர் விமானங்களுக்கு; ஆயிரம் கோடி ஆசிய விளையாட்டுக்களுக்கு!

கோர்ட் தீர்ப்பு: தனியார் துறையினர் தங்கள் வியாபாரத்தைப் பெருக்க லாட்டரி போன்ற திட்டங்களை நடத்தத் தடை விதித்த தமிழக அரசின் உத்தரவு சரியானதே! மக்கள் தீர்ப்பு: இனி எங்களுக்கு ஆசைகாட்டி மோசம் பண்ணும் லாட்டரியை நடத்தும் ஏகபோக உரிமை தமிழக அரசுக்கே. பரிசு பத்தாயிரமா லட்சமா? இது அச்சுப்பிழையா மோசடியா? நாம் வாங்கிய சீட்டுக்குப் பரிசு விழுந்தாலும் பரிசுத் தொகை கிடைக்குமா கிடைக்காதா என்று மண்டையைக் குடைந்து கொள்ளும் ஏகபோக உரிமை எங்களுடையதே!

சாதனை: பாஸ்கரா, ரோகிணி போன்றவற்றை விண்வெளிக்கு அனுப்பியது. வேதனை: இச் சாதனைகளுக்குப் பயன்படும் பெரிலியம் தாதுப்பொருள் இந்தியாவிலேயே ஏராளமாய் இருப்பது இந்திய விண்வெளி விஞ்ஞானிகளுக்கே தெரியாமலிருந்து அதை அயல் நாடுகளில் தேடி அலைந்து, கடைசியில் ஒரு மேல்நாட்டு விஞ்ஞானப் பத்திரிகையைப் புரட்டப்போய் அது இந்தியாவிலேயே கிடைக்கிறது என்பதைக் கண்டு படித்தது!

கூப்பாடு: கல்வித்தரம் குறைந்து விட்டது! குறைந்து விட்டது! ஏற்பாடு: மூன்று பாடங்களில் சைபர் மார்க் வாங்கியவருக்குக் கேரளத்தில் டாக்டர் படிப்புக்குச் சேர அனுமதி.

சிமெண்ட் விநியோக ஊழலுக்கு அந்துலே பொறுப்பேற்கத் தேவையில்லை– இது இந்திரா, ராஜீவ் முடிவு. குதுப்மினாரில் ஏற்பட்ட பரிதாபகரமான கோர மரணங்கள் பற்றி விசாரிக்கக் கமிஷன் சென்றபோது பொறுப்பேற்று பதில் சொல்ல யாருமே இல்லை! இது அதிகாரிகள் தாங்களாகவே செய்துகொண்ட முடிவு!

அதிகரிக்கும் அதிகாரங்கள்: தேசியப் பாதுகாப்புச் சட்டம், வேலைநிறுத்தத் தடைச்சட்டம் இத்யாதி இத்யாதி.. அதிகரிக்கும் குற்றங்கள்: கொலைகள், கொள்ளைகள், தனிநாடு கோரிக்கைகள், வேலை நிறுத்தங்கள் இத்யாதி, இத்யாதி.

தொழில் துறையைக் கட்டுப்படுத்த கண்ட்ரோல்கள்; கட்டுக்குள் அடங்காத பணவீக்கம். பொருளாதாரத் தேக்க நிலை: வேலையற்றோரின் ஏக்க நிலை. கறுப்புப் பணத்தைக் கண்டுபிடிக்க ரெய்டுகள்; கறுப்புப் பணத்தை வரவேற்கும் பத்திரங்கள். லஞ்ச ஒழிப்புக்கு விசேஷ அதிகாரிகள்; லஞ்சம் செழிப்பதற்கு ஏற்ற கொள்கைகள்!

புதிய புதிய பல்கலைக் கழகங்கள்; தினம் தினம் ஏற்றுமதியாகும் மூளைச் செல்வங்கள்!

சொன்னது: ஆமதாபாத் கோயில் அருகே தீ விபத்தில் 49 பேர் மரணம். சொல்லாதது: 60 கோடி மக்களின் உள்ளத்தில் ஏமாற்றத் தீயில் வெந்து நம்பிக்கையின் மரணம்.


1981 டிசம்பர் 20

துன்மதி மார்கழி 5

மலர்: 40 இதழ்: 21




கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்

'பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்'
-திருநாவுக்கரசர்

**38**

"போலே எழுந்திருங்கள்!" என்று சுவர்ணமுகி சொன்னதும் அர்ச்சுனன் கீழே காலை ஊன்றினான். முகத்தில் தாப ஜுரம் வீச மேல் நோக்கித் திரும்பினான். நா அசைய வில்லை. கண்கள் இரு வீழ்ச்சிகளாக வழிந்தன.

"இளவரசி!" என்றான்.

காற்றிலே வார்த்தை கரைந்து மிருது வாகியது.

நெஞ்சத்தில் வார்த்தைகள் முட்டி நிற்க, பேச முடியாமல் தத்தளித்து நின்றான்.

அவள் கண்கள் அவன் மீது லயித்தன.

ஒரு காந்தமான நீலம் மெள்ள அவள் பார்வைக் கதிரில் இறங்கி வருவதை அவன் பதட்டத்தோடு உணர்ந்தான்.

"வீரரே!" என்றாள் அவள்.

ஒரு சங்கீதத் துளிர் போல் குரல் பேசியது.

"நீங்கள்தானா இளவரசி!" என்றான் அவன்.

"ஏன், என் ஆவி வந்திருக்கிறது என்று பார்த்தீர்களா? நான் இன்னும் இறக்கவில்லை" என்றாள் அவள்.

"அது இந்த ராஜ்யத்தின் பாக்கியம்" என்றான் அவன்.

"இந்த ராஜ்யத்தின் பாக்கியம் மட்டும் தானா?" என்று கேட்டாள் அவள்.

அவன் நெஞ்சு விம்மி எழுந்தது.

அவன் தவிப்பதை அவள் கூர்ந்து பார்த்தாள்.

மிளிர்வான ஒரு புன்னகை முகமெங்கும் பரவ, கண்கள் மேலும் குளிர்ந்து அவனை நோக்கியது.

"முற்றுகை தகர்ந்தபோது உங்களைத் தேடினேன். உங்களைக் காணவில்லை!" என்றான் அவன்.

"அப்போதுதான் தேடினீர்களா? காட்டில் எனது குடியில் தேடவில்லையா?"

"அங்கேயா?" வார்த்தையில் தத்தளித்தான் அவன். "இளவரசி! உங்களுக்கு உதவி கொண்டுவருகிறேன் என்று போனேன். மகாராஜா என்னை வேறு திசை அனுப்பி விட்டார். திரும்பி வருவதற்குள்...."

"என் விதியே மாறிவிட்டது இல்லையா?" என்றாள் அவள். அப்போதுள்ள பலவீன வெளிச்சத்தில்கூட அவளுடைய கூர்மையான பார்வை அவன்மீது தைப்பதை உணர முடிந்தது.

"விதி...? விதி மாறிவிட்டதா இளவரசி?"

"இல்லையா வீரரே! நாட்டின் விதி மட்டுமல்ல, நம் விதிகள் எல்லாமே!"

அவன் தன் பார்வையைக் கீழே இறக்கினான்.



கண்கள் எல்லாம் தெப்பமாக மிதக்க அந்தப் பிரதேசம் முழுவதும் அதில் நலுங்கி ஆடியது.

கீழே குனிந்து தன் துக்கத்தை அடக்கப் பார்க்க, ''ஏன் வீரரே? உங்களுக்கு என்ன? ஏன் இந்த கண்ணீர்?'' என்றாள் சுவர்ணமுகி.

''இல்லை இளவரசி!'' என்று தழுதழுத்தான் அவன். ''தங்களுக்கு எப்போதும் பாதுகாப்பாக இருக்க நினைத்தேன். ஆனால் அதில் தவறிவிட்டேனே என்று வருந்துகிறேன்.''

''ஓ!'' என்றாள் அவள். ''எனக்குப் பாதுகாப்பாகவா? எனக்கு மட்டும் என்று சொல்வதில் ஏதாவது விசேஷம் உண்டா?''

''ஏன் இல்லை, இளவரசி? ரங்கப்பா ஒரு புண்ணிய கடமையை என்னிடம் ஒப்படைத்தார் இல்லையா?''

''உங்களிடம் மட்டுந்தானா? தோதாவிடமும் இல்லையா?''

''அவனிடமும் சேர்த்துத்தான் ஒப்பித்தார். அவன்தான் துரோகியாகி விட்டானே. அதனாலேயே என் பொறுப்பு அதிகமாகி விட்டது.''

''அதைச் சரிவரச் செய்தீர் என்று உங்கள் மனச்சாட்சி ஒத்துக்• கொள்கிறதா?''

அவளைப் பார்த்து அவன் திரும்பினான். அவன் நெஞ்சில் ஒரு பாரம் அடைத்தது.

''என்னால் முடிந்த அளவு செய்தேன் இளவரசி! அன்று சண்டை முடிந்த பிறகு திருப்பதியில் குதிரையில்ஓடிவந்து தங்களிடம் யுத்த களச் செய்தியைக் கூறினேனே! அன்றே நான் இறந்திருக்க வேண்டும். இறந்திருப்பேன்... உங்களைக் கடைசியாகத் தரிசித்தேன் என்று இறந்திருப்பேன்... ஆனால் தோதாவின் வஞ்சம் சிறிது நேரத்திலேயே தெரிந்துவிட எனக்கு ஒரு ஆக்ரோஷம் எழுந்தது. எப்படியும் உங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தேன். அந்தக் கணமே கடவுளிடம் நான் வேண்டிக்கொள்ள ஆரம்பித்து விட்டேன். 'கடவுளே! என் உயிரை எனக்குத் திருப்பிக் கொடு! நான் எங்கள் இளவரசியைக் காப்பாற்ற வேண்டும்' என்று நெக்குருகப் பிரார்த்தித்தேன். என் பிரார்த்தனை வீண்போகவில்லை. மரணத்தின் வாயிலிருந்து நான் தப்பிவிட்டேன்.''

''ஓ!'' என்று பரவச மிளிர்ச்சியுடன் கூறினாள் அவள். ''நான்தான் அன்று என்னை ஒரு சேடி என்று சொல்லி உங்களை ஏமாற்றி விட்டேன்.''

''நான் ஏமாறவில்லை இளவரசி! நான் அதற்கு முன்பே நாகலாபுரம் திருவிழாவில் பார்த்திருக்கிறேன்....''

''பார்த்தீர்களா?'' என்று பரபரப்பில் ஒரு ஆச்சரியத்துடன் கேட்டாள் சுவர்ணமுகி.

''ஆமாம் இளவரசி! பார்த்து மனத்தில் பரவசமாயிருக்கிறேன். வாழ்க்கையில் யாரையாவது துயர் எதுவும் வராமல்காக்க வேண்டுமென்றால் அது தங்களைத்தான் என்று அப்போதே நினைத்து விட்டேன்.''



''ஓகோ! வேடிக்கையாக இருக்கிறதே!'' என்றாள் அவள்.

''ஆமாம்! அப்படி ஒரு நினைப்பைத் தங்களது அனுமதி இல்லாது கொண்டது கூடத் தப்பிதந்தான். ஆனால் அப்போது தாங்கள் என்னைப் போல் ஒரு கௌரவமான குடும்பப் பிரஜை என்று மட்டும் கணித்திருந்தேன். அதனால் என் நினைப்பு எனக்குப் பொருத்தமாகத் தோன்றியது. ஆனால் தாங்கள் யார் என்று யுத்த களத்தில் ரங்கப்பா எனக்கு அறிவித்த பிறகு....''

''என்னதான் நினைத்தீர்கள்?''

''என்னைத் தாண்டி உப்பரிகை மேல் ஏறும் ஒரு ராஜாளி என்று நினைத்து விட்டேன். நான் மண்ணிலேயே இருப்பவன். தாங்கள் மண்ணுக்கு மேலேயே இருப்பவர்கள். உப்பரிகையில் வாழ்பவர்கள். உங்களைப்பற்றி நான் எந்த நினைப்பையும் வைத்துக் கொள்வது பொருந்தாது என நினைத்தேன். ஆனால் என்னை அறியாமல் அந்த நினைப்பு என்னிடமே தங்கிவிட்டது இளவரசி! அதற்காக என்னைப் பொறுத்தருளுங்கள்!''

அவள் நெஞ்சு தழுதழுத்தது. கீழே அவன் குனிய பாறையில் அவன் வைத்திருந்த கையில் சூடாக ஒரு திவலை விழுவதைக் கண்டு திடுக்கிட்டு அவன் மேலே பார்த்தான்.

''இளவரசி! இதென்ன?''

அதுவரை நிமிர்ந்திருந்த சுவர்ணமுகி இப்போது அப்படி இல்லை. பாறையின் முகட்டில் முகத்தைக் கவிழ்த்தி அதோடு இணைந்திருந்தாள்.

அவளிடமிருந்து எழுந்த சிறிய விசிப்புகள் கீழேவரை கேட்டன.

''இளவரசி! இளவரசி!'' என்றான். சிறிது நேர விசிப்புக்குப் பிறகு அவள் மெள்ளத் தலை நிமிர்ந்தாள். கண்களைக் கையால் துடைத்தாள்.

''இளவரசி! தங்கள் மனதை ஏதாவது துன்புறுத்தி விட்டேனா?'' என்று கவலையுடன் கேட்டான் அவன்.

''இல்லை, வீரரே! இவ்வளவையும் முன்பே சொல்லாததனால்தான் துன்புறுத்திவிட்டீர்கள்!'' என்றாள் அவள்.

திடுக்கிட்டான் அவன். ''அப்படியா இளவரசி!''

''ஆமாம் வீரரே! இவை மட்டும் அப்போதே தெரிந்திருந்தால் நான் என் ராஜாங்கச் சுமையை அன்றே தூக்கிக் களைந்திருப்பேன். உங்களையும் அந்த அரசாங்க பாரத்துக்கு முழுக்குப் போடச் சொல்லி இருப்பேன். எந்தவிதப் பொறுப்புமற்ற ஒரு பறவை உள்ளமாக உங்களோடு சேர்ந்து இந்தப் பூவெளியில் பறந்திருப்பேன்.''

கண்களைத்திரும்பவும் மூடி அவள் விசிக்க, அவன் இதயம் ஒரு பொங்குமாங் கடல்போல் பொங்கிப் பெரிதாக ஆர்ப்பரித்தது.

''இளவரசி! இளவரசி! தாங்கள் சொல்வது எல்லாம் உண்மையா? நான் கனவு காணவில்லையே?'' என்றான் பாதி புலம்பலாக.

சுவர்ணமுகி அவனை விகசிதமாக விழித்தாள். அவள் கண்கள் இப்போது நிலவொளியில் பளபளப்பாக ஒளி அடித்தது. அவனை மிகத்தாபமும் ஆதரவும் கலந்து நோக்கி,

''வீரரே! எனக்குக்கூட அந்தச் சந்தேகம் தான்! நீங்கள் நிற்பது ஒரு கனவு இல்லையே!''





## அமைதியான ராகம்!

எனக்குப் பிடித்தராகம் பூர்வி கல்யாணி. கர்னாடக இசை பத்தியில் உதயமானது. இசையில் இரண்டறக் கலப்பது, இறைவனுடன் ஐக்யமாவதற்கு ஒரு மார்க்கமே. அகம் பாவத்தைத் திரஸ்கரித்து இறைபொருளிடம் சரணமாதல் கருணையை நாடியே. அந்த இறைஞ்சும் பாவத்திற்கேற்ற பண் பூர்வி கல்யாணி. அந்த ராகத்தின் இனிமை கிளர்ச்சியை ஊட்டுவதில்லை. அதன் இனிமை ஆழ்கடலின் அமைதியைப் போன்றது. அலைகளின் அட்டகாசமோ, பேரிரைச்சலோ அதில் காண முடியாது. அந்த ராகத்தின் நிறைவை, அனைத்தையும் அறிந்து உள்ளடக்கிய அமைதி எனக் கூறலாம்.

இந்த ராகத்தில் ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அருளிய 'ஸ்ரீ மீனாக்ஷி மேமுதம் தேஹி' என் மனதைக் கவர்ந்த பாடல். அன்னை அங்கயர்க்கண்ணியின் பணி பக்தர்களை கண் காணிப்பதுதான். தாய் மீன் முன்நீந்த, குட்டிகள் சரிவரப் பின்வருகின்றனவா எனப் பார்க்கும். அது போன்று பக்தர்களைப் பாலனம் செய்து நல்வழியில் நடத்திச் செல்கிறாள் ராஜ மாதங்கி. வடமொழியில் அமைந்த இந்தக் க்ருதி 'பிராஸம்' எனப்படும் சொல் நடையழகில் சிறந்தது.

இப்பாடலை ஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமி பாடிக் கேட்க வேண்டும். அவர் குரு பரம்பரைக்குப் பிடித்த ராகம் பூர்வி கல்யாணி. அவர் பாடக் கேட்கும்பொழுது கால தேச வர்த்தமானத்துக்கு அப்பாற்பட்ட எல்லையற்ற நிலைக்கு அழைத்துச்செல்லப்படுகிறோம்.

-கி. ரா. நாராயணன்

---

''இல்லை இளவரசி! இது கனவல்ல நனவு தான்'' என்றான் அவன்.

''வீரரே! நினைத்துப் பார்த்தால் கனவுக்கும் நனவுக்கும்அதிக வித்தியாசம் கூட இல்லை. இரண்டிலும் ஒரே மனம்தான் தொடர்ந்து ஓடுகிறது. இப்போது இந்தப் பரிவாரங்களோடு எங்கேயோ போகிறோமே, இதுகூட இந்தக் கணமே ஒரு கனவாக மாறக்கூடாதா என்று தோன்றுகிறது.''

''ஏன் மாறவேண்டும் இளவரசி! இது தானே நாம் இங்கே சந்திக்க உதவியிருக்கிறது?''

''உண்மைதான் வீரரே, ஆனால் இந்தச் சந்திப்பு இப்படி ஒரு கொடுமையான முறையில் நடக்கவேண்டுமா என்றுதான் வருத்தப் படுகிறேன்'' என்றாள் அவள்.

''இதில் என்ன கொடுமை இருக்கிறது? ஒரு ராஜ காரியத்துக்காக நாம் இப்போது பயணம் பண்ணிக் கொண்டிருக்கிறோம். இது ஒரு புண்ணியமான காரியமில்லையா?'' என்றான் அவன்.

''இல்லை வீரரே இல்லை. உங்களுக்குத் தெரியாது. இப்போது நடக்கும் அத்தனையும் கொடுமையால்தான்நடந்திருக்கிறது. எனக்கு இது பிடிக்கவில்லை. வீரரே! சொல்லுங்கள்! இந்தக் கணமே நான் சித்தமாகஇருக்கிறேன். இப்போது இந்த நொடியில் எல்லாவற்றையும் துறந்துவிடச் சித்தமாக இருக்கிறேன். சொல்லுங்கள்! சொல்லுங்கள்!'' என்று சற்று ஆத்திரமோடு கூறினாள் அவள்.

''இளவரசி!'' என்றான் அவன் நிதானமாக.

அவள் விசித்துக் கொண்டிருந்தாள்.

''என்ன சொல்கிறீர்கள் இளவரசி!''

அவள் பெரிதாக விசிக்க அது விம்மலாக மாறியிருந்தது.

''தாங்கள் படும் கொடுமை என்ன? அதை இழைத்தது யார்? சொல்லுங்கள்!''

---



## எந்தக் காண்டீன் சிறந்தது?

சென்னையில் இசை விழாவின்போது பல்வேறு அரங்குகளிலும் காண்டீன்கள் சக்கைப்போடு போடுகின்றன!

இசையை ரசிக்கும் அதே ஆர்வத்துடன் டிபனை ரசிப்பவர் ஏராளம்!

எந்தக் காண்டீன் டிபன் பிரமாதமாய் இருக்கிறது?

தீர்ப்பு வழங்குபவர் ஆனந்தராவ், தாஸப் பிரகாஷ் ஹோட்டல் நிர்வாகி; ஹோட்டல் நடத்துவோர் சங்கக் கௌரவக் காரியதரிசி. கல்கி நிறுவனம் சார்பில் ரூ. 100/- பரிசளிப்பார், முதல் தர காண்டீனுக்கு.

காண்டீன் நடத்துபவர்களே! தயாராயிருங்கள்! ஆனந்த ராவின் டிஃபர் விஜயத்தை எதிர் பாருங்கள்!

தீர்ப்பு :

ஜனவரி 3வ. கல்கி இதழில் இடம் பெறும்.

அவள் விசிப்பை மெள்ள அடக்கி நிமிர்ந்தாள்.

"ஏன்? இந்தக் கொடுமையை எனக்குச் செய்தவர்கள் என் உண்மைத் தந்தை, என் வளர்ப்புத் தந்தை இருவரும்தான்."

"என்ன சொல்கிறீர்கள்?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் அவன்.

"ஆமாம் வீரரே! என் தந்தை இம்மாடி ஸ்ரீரங்க மகாராஜா தமது வம்சத்தின் மீது ஆணைவைத்து எனக்கு ஏன் வேண்டுகோள் விடுக்க வேண்டும்? அந்த வேண்டுகோளை என் வளர்ப்புத் தந்தை ரங்கப்பா ஏன் பாதுகாப்பாக வைத்திருந்து என்னிடம் சொல்ல வேண்டும்?"

"என்ன சொல்லிவிட்டார்கள் இளவரசி?"

"பட்டயத்தில் எழுதியிருப்பது தங்களுக்குத் தெரியாதா?"

"என்னவென்று சொல்லுங்கள் இளவரசி?"

அவள் உடனே சொல்லவில்லை.

அவன் திரும்பவும் வினவுவதற்குள் திடீரென்று 'ஓ' என்ற பேரிரைச்சல் கேட்டது.

திடுக்கிட்டு அர்ச்சுனன் காதைக் கூர்மையாக்க, ஆரவாரம் ஒன்று மெள்ள மெள்ள பெரிதாகிக் கொண்டிருந்தது.

சுவர்ணமுகி திரும்பிப் பார்த்தாள்.

அவள் பின்புறத்தில் சற்றுத் தொலைவிலிருக்கும் பரிவாரங்களிடையே பெரிய குழப்பம் ஏற்பட்டிருந்தது.

ஜொலிக்கும் தீவர்த்திகளுடன் ஒரு குதிரைக் கூட்டம் எங்கிருந்தோ வந்திருந்தது.

"வீரரே! இங்கே குழப்பம்!" என்று அவள் சொல்ல, அர்ச்சுனன் பரபரத்தான்.

"இளவரசி! இளவரசி! என்ன விஷயம் சொல்லுங்கள்!" என்று மேலே பார்த்துக் கத்தினான்.

இளவரசி ஏன் பேசவில்லை? (தொடரும்)

## 'கிரிக்கெட் அனுபவம்'

### வாசகர் பக்கம்

டெஸ்ட் ஆட்டக்காரர்களுக்குத்தான் சுவையான அனுபவங்கள் ஏற்படவேண்டுமா என்ன? நீங்கள் பள்ளி, கல்லூரியில் படிக்கும் போதோ அல்லது அதற்குப் பிறகோ கிரிக்கெட் ஆடிய போது ஏற்பட்ட ரசமான ஒரு அனுபவத்தை ரத்தினச் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். பொங்கல் – கிரிக்கெட் சிறப்பிதழில் பிரசுரமானால் பரிசு உண்டு.

முடிவு தேதி டிசம்பர் 28. கடிதப்போக்கு வரத்து, திருப்பி அனுப்புதல் இல்லை. உறையின் மேல் "கிரிக்கெட் அனுபவம்" என்று குறிப்பிடவும்.

## மேதையான ஒரு குழந்தை!

இன்று திரு டி. என். கிருஷ்ணன் எல்லோருடைய மதிப்பையும் பெற்றுச் சிறந்த வயலின் வித்வானாக இருக்கிறார். ஆனால் பல வருஷங்களுக்கு முன் அவர் மாஸ்டர் டி. என். கிருஷ்ணன் என்றுதான் அறியப்பட்டிருந்தார். சௌடையா போன்ற வித்துவான்களுடைய புகழ் உன்னத கட்டத்தில் இருந்த போதுகூட மாஸ்டர் கிருஷ்ணன் செம்மங்குடி போன்ற பிரபல சங்கீத வித்வான்களுக்கும் பக்கவாத்தியம் வாசிக்கக் கூடிய பேராற்றல் படைத்திருந்தார் என்பது அன்று பரபரப்பு ஊட்டிய செய்தி.

அந்தச் சமயம் நான் வேலை பார்த்த ஸ்தாபனத்தில் திரு ஏ. நாராயண ஐயர் என்பவர் வந்து சேர்ந்தார். அவரை ஏற்கனவே நன்கு அறிந்த ஒரு நண்பர் ஒரு நாள் 'இவர் பிள்ளைதான் மாஸ்டர் டி. என். கிருஷ்ணன். அவனுக்கு இவர் குருவும் கூட' என்று சொல்லவும் எனக்கிருந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

ஒரு நாள் அவர் வீட்டுக்கு என்னை அழைத்துக் கொண்டு போனார். வீட்டு வாசலில் நுழையும் போது வெளியே நின்று கொண்டிருந்த சிறுவனைக் காட்டி 'அதோ நிற்கிறாண்டா கிருஷ்ணன்' என்று சொல்லவும் நான் திரும்பிப் பார்த்து அப்படியே ஸ்தம்பித்து விட்டேன். பேச்சே எழவில்லை. ஒரு மேதைக் குழந்தையை அல்லவா நேர்முகமாகப் பார்க்கிறேன்! அவருக்கு வயது பன்னிரண்டு இருக்கும். எனக்கு இருபத்தி நான்கு. நான் மென்று விழுங்குவது போல் பார்த்தது சிறுவனுக்கு தர்ம சங்கடமாய் இருந்திருக்க வேண்டும். கண்களைத் தாழ்த்தித் தரையைப் பார்க்க நின்றார்! இன்றும் என் உள்ளத்தில் அந்தச் சம்பவம் பசுமையாக இருக்கிறது.

இப்ப என்னடா என்றால் கிருஷ்ணனின் குழந்தைச் செல்வங்களுக்கு ஏறத்தாழ இதே நிலை!

எம். ஜே. மார்ட்டின்



# கடுகு பதில்கள்!




○ லலிதா ஸ்ரீனிவாசன், வேலூர்
கே: செகண்ட்ஹாண்ட் என்பதற்குத் தமிழாக்கம் என்ன?
ப: வினாடி முள் (எப்படித் தப்பித்துக்கொண்டேன் பார்த்தீர்களா?)

○ ஆர். நித்யா, நெப்பத்தூர்
கே: அனுபவம் என்ற பாடத்தைப் பலர் சரியாகப் படிப்பதில்லை என்கிறீர்களே, பாடத்தை நன்றாகப் படித்தவர்கள் பெயில் ஆவதில்லையா?
ப: குழந்தை நித்யா, பாடத்தை நன்றாகப் படித்துவிட்டால் மட்டும் போதுமாம்மா? பரீட்சையில் நன்றாக எழுத வேண்டும் என்பது முக்கியம். பிரச்னைகள் வரும் போது அனுபவம் மூலம் கற்ற பாடங்களை உபயோகிக்கத் தெரிய வேண்டும்.

○ கை. இராமமதி, கும்பகோணம்
கே: 'சட்டை சின்னதாகிவிட்டது' 'கல் தடுக்கிவிட்டது' இதிலிருந்து என்ன தெரிகிறது?
ப: பழியை மற்றவர்கள் பேரில் போடுகிறவன் மனிதன் என்பது வெளிப்படுகிறது என்கிறீர்களா? 'ரயிலை மிஸ் பண்ணிவிட்டேன்' என்பது போன்று கூறும் சமயத்தில் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறானே!

○ ஸ்ரீ. ராம்குமார், சென்னை-90
கே: மனசாட்சிக்குப் பயப்படுவதுண்டா?
ப: உண்டு. ஆனால் வெளியில் காட்டிக்-கொள்ள மாட்டேன்.

○ எல். ஸ்ரீதர், அம்பூர்
கே: ஒரு வாரம் 'கடுகு பதில்கள்' இல்லாமற் போனாலும் 'ட்விங்' மணமற்றுப் போய்விடுகிறது என்கிறேன் நான், இதுபற்றி உங்கள் கருத்து?
ப: இந்தக் கேள்விக்குப் பரிசு கொடுத்திருப்பேன். பத்திரிகையில் உங்கள் முழு விலாசம் வெளியானால் ஆயிரக் கணக்கான வாசகர்கள் உம்மைத் தேடி வந்து பிய்த்து உதறிவிடுவார்கள். ஆகவே பரிசு தரவில்லை. என் அன்புக்கும், பாராட்டுக்கும் நன்றிக்கும் உரிய அறிவுச் செம்மல் அவர்களே!

○ மா. மோகன், கோவை-38
கே: சவுண்ட் ஆப் மியூஸிக், சங்கராபரணம்-இரண்டில் உங்களைக் கவர்ந்த படம் எது?
ப: ஆங்கிலப் படம்தான். கதை, நடிப்பு, நகைச்சுவை, இசை எல்லாம் சங்கராபரணத்தைவிட ஓசத்தியாக இருந்தது. சங்கராபரணத்திற்கு நூறு பர்சண்ட் மார்க் என்றால் சவுண்டிற்கு 150 பர்செண்ட்!

○ சித்ரா சுப்பராமன், சென்னை-33
கே: ஏணி, தோணி, கருவேப்பிலை - இவை பரிதாபத்துக்கு உரியவை அல்லவா?
ப: எதற்குப் பரிதாபப்பட வேண்டும்? உலகில் ஒவ்வொன்றுக்கும் ஒரு பணி இருக்கிறது. அதைச் செய்யும்போது ஏற்படும் நிறைவுதான் முக்கியம். மேலே ஏற்றிவிட உதவுவதுதான் ஏணியின் பணி. தானும் மேலே ஏற முடியவில்லையே என்று ஏணி வருத்தப்படக் கூடாது. இக்கரையிலிருந்து அக்கரைக்கு மக்களை ஏற்றிச் செல்வது தோணியின் வேலை. அக்கரையை அடைந்ததும்கரையேறி ஊருக்குள் தானும் போக வேண்டும் என்று அது எதிர்பார்க்கக் கூடாது. சாம்பாருக்கு மணம் ஊட்டுவதுடன் கருவேப்பிலையின் பணி முடிந்து விட்டது. 'ஐயோ, என்னை ஒதுக்கிவிட்டார்களே' என்று அது புலம்பினால் அதன் அறியாமையைத்தான் குறிக்கும்.

○ எ. அலெக்சாந்தர், புளியகுளம்
கே: மாண்புமிகு சிரிப்பு மன்னன் அறிவுக்கதிரவன் கடுகு அவர்களே....
ப: இப்படி யெல்லாம் கேள்விக்கு முன்னே எழுதாதீர்கள். இந்த அடைமொழிகளையே ஆயிரம் பதினாயிரம் தடவை படித்துக் கொண்டிருக்கிறேனே தவிர மேற்கொண்டு எழுதப்பட்டிருக்கும் கேள்விகளைப் படிக்கத் தோன்றுவதில்லை. நஷ்டம் உங்களுக்குத்தான்!

பரிசு பெறுபவர்:

**கை. இராமமதி,**
**36, ஆசாரியார் தெரு,**
**கும்பகோணம் 612 001.**



# கல்கி

ஜனவரி 17
பொங்கல்-கிரிக்கெட்
சிறப்பிதழ்

அதிக
பக்கங்கள்
அதே விலை

சமூகத் தொடர்கதைகள்: லக்ஷ்மி
ஜெயந்தன்

சரித்திர தொடர்கதை: செம்பியன்

முழு நீள நாவல்: பாக்கியராஜ்

இலக்கிய -ஆன்மிகப் பகுதி: கீரன்

நகைச்சுவை அம்சம்: அகஸ்தியன்

மர்மச் சித்திரத் தொடர்: அபர்ண நாயுடு
ராமு

# வட்ட மேஜை

● எங்கள் பகுதி (மேட்டுப்பாளையம் மருதி காலனி.) சென்னை மாநகராட்சி 147வது வட்டத்தில் உள்ளது. சென்னைக்குள் இப்படி ஒரு பகுதியா என்று ஆச்சரியமாக இருக்கும். சுமாரான நிலையில் கூட சாலை வசதிகள் இல்லை. இதனால் மிகவும் சிரமப்பட்டு வாங்கிய பெருந்து வழித் தடங்கள் எம். 9, எம். 11 ஆகியவை சாலை சரியில்லாமையால் இரண்டு மாதங்கள் கூட ஓடவில்லை.

குடிநீர் லாரிகளில் கொண்டு வரப்பட்டு நாள் ஒன்றுக்கு இரண்டு குடத்துக்கு மேல் கிடைத்தால் அதுவே எங்களுக்கெல்லாம் ஆடம்பரமான வசதிதான்!

இப்பகுதியின் மேல் பகுதியில் ஆலந்தூர் அமைந்துள்ளதால் அங்குள்ள கழிவு நீர்களும் மழை நீர்களும் இப்பகுதியில் உள்ள மருதி காலனியில்தான் வடிகிறது. போதாததற்கு இருக்கும் இரண்டு கழிவிடங்களும் சுத்தம் செய்யப்படாமல் நாற்றத்தையும் வியாதியையும் பெருக்குகின்றன. சாக்கடைகளும் சாலைமேல்தான்.

இப் பகுதி மக்கள் (பெரும்பாலும் பெண்கள்) இரவு 7 மணிக்கு மேல் வெளியே வர அச்சப்படுகிறார்கள், காரணம், கண்மூடி விட்ட தெருவிளக்குகள்.

சுமார் 3000த்துக்கு மேல் உள்ள ரேஷன் கார்டுகளுக்கு ஒரேகடையில் பொருள் வாங்க வேண்டியுள்ளது. குறைந்தது இரண்டுஅல்லது மூன்று மணி நேரம் நிற்க வேண்டும்.

இவற்றைச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் கவனத்துக்குப் பலமுறை கொண்டு வந்தும் எந்தவிதமான தீர்வும் இல்லை.

சென்னை-88 எம். மார்த்திபன்
மற்றும் 62 மேட்டுப்பாளையம் மருதி காலனி வாசிகள்.

● வாசகர்களின் ரசனையை உணர்ந்து, இந்தக் கிரிக்கெட் சீசனில் கிரிக்கெட் விமர்சகர் ராஜா அவர்களின் விமர்சனக் கட்டுரையை வெளியிட்டு எங்களை மகிழ்விக்கும் உங்கள் எண்ணத்தை என்னென்பேன்?

களமருதூர் எம். ரமணி

● ஜெயரதன் எழுதிய 'கல்யாணி எழுதிய காதல் கடிதம்' மிகச் சிறப்பான சிறுகதை. குழப்பமான ஆணின் மனநிலையை நன்கு விளக்கியுள்ளார். அக்கதையில் வரும் பாத்திரங்களைக் காணும் சமயம் எனது வாழ்க்கையின் பிரதிபலிப்பாக...

லெட்சுமாங்குடி ஏ.கே. நு...

● ஜனநாயகக் காவலரான மகான் ராஜாஜிக்கு இதைவிடச் சிறந்த பிறந்த நாள்பரிசை யாரும் அளிக்க முடியாது.

பெருங்களத்தூர் எல். ரவிசங்கர்

● ஜனநாயகம் இங்கு இறந்துவிட்டதா? என்று கொட்டை எழுத்தில் அட்டையில் போட்டிருந்ததைப் பார்த்ததும் பயந்து போய்விட்டேன். நம் மக்கள் தாம் உண்டு தம் வேலையுண்டு என்று இருப்பார்களே தவிர இதிலெல்லாம் அக்கறை எள்ளளவும் இருக்காது. அவர்களுக்கு அவரவர்களைப் பாதிக்கும் போதுதான் ஜனநாயகத்தின் அருமை தெரியும்.

சென்னை-28 எல். ஆர். விஜயகுமார்

● ஜனநாயகம் இங்கு இறந்துவிட்டதா? என்ற கேள்விக்கு, 'இன்னும் கொஞ்சம் உயிர் இருக்கிறது!' என்பதுதான் பதிலாக இருக்க முடியும். உண்மையில் சர்வாதிகாரத்தை எதிர்க்கிற தற்போதைய எதிர்க் கட்சிகள் ஒருங்கிணைந்து,கருத்தொருமித்துப்போராடா விட்டால் பரம்பரை ஆட்சிக்கும், பரம்பரை சர்வாதிகாரத்துக்கும் வழிவகுக்கப்பட்டுவிடும் என்பதை உணர்ந்தால் நாட்டுக்கு நல்லது.

செங்கவல்லி கி. முருகவேல்

● இன்றைய குழந்தை இலக்கியம் நாளைய இலக்கிய வரலாற்றில் ஓர் அங்கம் என்ற கருத்தில், 'ஏழாவது மகா நாட்டின் ஏழு அதிசயங்களை' நன்கு எடுத்தெழுதியிருப்பது பாராட்டுக்குரியது. குழந்தை இலக்கிய மாநாடுதானே என்று பிற பத்திரிகைகள் கொடுக்கத் தவறிய முக்கியத்துவத்தைத் தாங்கள் தந்திருக்கிறீர்கள்.

பெங்களூர்-5 அ. குமார்

● அன்பிற்கினியவனின் 'ரூபா' ஆரம்பமே ஜோர். நாங்களும் முகேஷுடன் சேர்ந்து ரூபாவைத் தேடப் போகிறோம், கல்கி பத்திரிகையைத் தவறாமல் வாங்கி.

காட்டாங்குளத்தூர் வி.ச. கிருஷ்ணரத்னம்

● பீ. ப. சோமு பாரதியைப் பற்றிய கட்டுரையில் திரு பி.வி. கிருஷ்ணசாமி ஐயர்தான் 'வந்தேமாதரம்' என்ற பாட்டை அச்சில் ஏற்றியவர்என்று கூறியிருக்கிறார். இது தவறு. 'வந்தே மாதரம்', 'மன்னும் இமயமலை', 'எந்தையும் தாயும்' ஆகிய மூன்று பாடல்களையும் 1907ல் காலஞ்சென்ற எனது தந்தை வி. கிருஷ்ணசாமி ஐயர்தான் முதன் முதலில் பதிப்பித்தார். இதனுடைய நகலும் தற்போது உள்ளது. ஏதேனும் ஐயங்கள் வரும் பட்சத்தில் என்னால் இதை நிரூபிக்க முடியும்.

சென்னை-18 கி. சந்திரசேகரன்

● 'தூக்கத்தில் இருந்த மக்களைத் தட்டி எழுப்பி நாராயண நாமத்தைக் கேட்கச் செய்த ஆண்டாள் எங்கே? விழிப்பிலேயே உறங்கிப்போய் நரகத்தை அடைந்த.....' விமலா ரமணியின் எளிமையான-வார்த்தைப் பிரயோகம் சிறப்பாக இருந்தது.

திருவாரூர் ஆர். கரியப்பா

# நட்சத்திரத்தின் நடிப்பு டால்பினர் டிவியின் பிரதிபலிப்பு



டால்பினர் டிவி எல்லோரும் விரும்பத் தக்க அருமையான ஒன்று—மார்க் I ஆக இருந்தாலும் சரி அல்லது மார்க் II ஆக இருந்தாலும் சரி.

எளிமையான இயக்கத்திற்கு ஏற்ற ஸ்லைடிங் கண்ட்ரோல்களும், தெளிவான ஒலியினை பிரதிபலிக்கும் ஹை-பி ஸ்பீக்கர்களும் உள்ள டால்பினர் டிவி மழைக் காலத்திலும் படங்களை மிகத் தெளிவாகக் காட்டுவதின் மூலம் உங்கள் குடும்ப நண்பனாகிறது.

<u>மார்க் I ன் சிறப்பு அம்சங்கள்:</u>

- 20" அளவுள்ள திரை.
- சப்தமாகவும் தெளிவாகவும் ஒலியினை பிரதிபலிக்கும் ஹை-பி ஸ்பீக்கர்கள்.
- டேப் ரெக்கார்டர் மற்றும் ரெக்கார்டு பிளேயர் முதலியவற்றை இத்துடன் இணைக்கும் வசதி.
- உட்சென்று மறையும் இரட்டைக் கதவுகள்.
- L.E.D. இண்டிகேட்டர்.

<u>மார்க் II ன் சிறப்பு அம்சங்கள்:</u>

- 24" அளவுள்ள பெரிய திரை
- ஒவ்வொரு சானலுக்கும் ஒளிக் கதிர்களை அனுப்பும் 10 வாட்ஸ் (10 Watts) கொண்ட திடமான ஒளி ஏற்புத் தடங்கள்.
- பிரத்யேகமான "பாஸ்" மற்றும் "டிரபிள்" ஸ்லைடிங் கண்ட்ரோல்கள்.
- 20 செ.மீ. டூயல் கோன் ஹை-பி ஸ்பீக்கர்.
- ரெக்கார்டு பிளேயர் மற்றும் டேப் ரெக்கார்டர் முதலியவற்றை இத்துடன் இணைக்கும் வசதி.
- உட்சென்று மறையும் இரட்டைக் கதவுகள்.
- L.E.D. இண்டிகேட்டர்.
- சேனல் இண்டிகேட்டர்.

எல்லாவற்றிற்கும் மேலாக டால்பினரின் விற்பனைக்குப்பின் மிகச் சிறந்த சேவை என்றும் எப்பொழுதும் உண்டு.





## டால்பினர் டிவி

நாளைய தொழில் நுட்ப வளர்ச்சியை இன்றே பிரதிபலிக்கிறது

கேஜேட்ரானிக்ஸ் (பி) லிமிடெட்,
சென்னை-போன்: 415030, 411938
பெங்களூர்-போன்: 577141 ஹைதராபாத்-போன்: 821402
புதுடெல்லி-போன்: 682620

பெற்ற வயிற்றில் சங்கடம். அன்னபூரணி தவித்தாள். எங்கே தேடுவது? வேலைக்குப் போகிற பெண்தான். வழக்கமாக வரும் நேரத்தைவிடக் கால் மணி, அரை மணி அதிகமானால்கூட அதிர்ந்துவிடும் மனம். பெண் ஐந்து நாட்களாக வரவில்லை என்றால்..

ஹாலில் ஊஞ்சலில் சபேசன், உள்ளக் குமுறலைக் காட்டாமல் லேசாக ஆடிக் கொண்டிருந்தார். என்ன செய்திருப்பாள் இந்த சுபத்ரா? இன்று ஐந்தாம் நாள்.

''இன்று மாலை வந்து சேரலாம். கவலைப் படவேண்டாம் — சுபத்ரா''

நான்கு மணி சுமாருக்கு வந்த தந்தி வாசகம். அதுவும் அவளே அனுப்பியிருக்கிறாள். அப்பாடி. அவள் உயிருடன் இருக்கிறாள் என்ற நினைப்பே பலம் தந்தது. எங்கே போனாள் ஐந்து நாட்களாக!

அவருக்குத் தலை சுற்றியது. அன்னபூரணி பேசிப் பேசி ஓய்ந்து விட்டாள்.

''ஆபீஸ் விஷயமாகப் பெண் அதிகாரியுடன் பெங்களூர் சென்றிருக்கிறாள்'' என்றுதான் அன்னபூரணி பக்கத்து வீட்டுக்காரர்களிடம் சொல்லியிருக்கிறாள். நல்ல வேளையாக முன்பொரு சமயம் சுபத்ராவின் மேலதிகாரி — விசாலம் — ஸ்கூட்டரில் கொண்டு விட்டுப் போனது இப்பொழுது சால்ஜாப்பு சொல்ல உதவுகிறது என்று நினைத்துக்கொண்டாள்.

''ம்... அப்பா அம்மா கொடுக்கிற செல்லம். அவளுக்குத் தான் சம்பாதிக்கிறோம் என்ற திமிர். இப்படியெல்லாம் ஆட்டம் போடுகிறாள். தைரியமாகத் தந்தி அனுப்பியிருக்கிறாளே... வரட்டும் அப்பா எப்படி 'ரியாக்ட்' செய்யறார்னு பார்ப்போம்...'' என்று டைரியில் எழுதிவிட்டுத் தலை நிமிர்ந்தான் ரகு.

வாசலில் ஆட்டோ வந்து நின்றது. சுபத்ராதான். ஹாண்ட் பாக்கிலிருந்து ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டு சாவதானமாக வாசற்படி ஏறி உள்ளே நுழைந்தாள். அவள் பார்வை ஒரு சுற்று முடித்து, மீண்டும் அப்பா மீது வந்து நின்றது.

''உள்ளே நுழையாதேடி... அப்படியே எங்கேயாவது கண் காணாமல் போயிடறது தானே?''

—அம்மா வெடித்தாள்.

சுபத்ரா அப்படியே நின்றாள். எதிர்பார்த்த வரவேற்புதான். ஆனால் ஒரு வித்தியாசம். அப்பாதான் சொல்லம்பு வீசுவார் என்று எதிர்பார்த்தாள். அவர் பாறையாய் அமர்ந்திருக்க, பெற்ற அம்மா துரத்துகிறாள்.

அவளுடையது நியாயமான கோபம்.

''ஏண்டி நின்னுட்டே. அம்மா சொல்றாளேன்னு திரும்பப் போயிடாதே. உள்ளே வா. தந்தி கொடுத்துட்டுத் தானே வந்திருக்கே. வேற வதந்தி கைகால் முளைச்சு நடக்கிறதுக்குள்ளே வந்துட்டே. வா.''

—இது அப்பா.

**பாமா கோபாலன்**





# அகழியாகிறது..

சுபத்ராவுக்கு இதுவும் ஆச்சரியம் தான். அப்பாவா இவ்வளவு அழுத்தமாக, நிதானமாகப் பேசுகிறார்?

புடைவையைச் சற்றுத் தூக்கிக் கொண்டு ஹாலினுள் நுழைந்தாள். ரேடியோ அருகில் ரகு. சோபாவில் அமர்ந்தபடி. , பத்திரிகையில் பார்வை படிய, மௌனமாக...

அம்மா ஆத்திரத்துடன் பெண்ணைத் தொடர்ந்தாள். சுபத்ரா நிதானமாக ஹாண்ட்-பாக்கைச் சுவரில் ஆணியில் மாட்டி விட்டு கிணற்றடிக்குச் சென்றுவிட்டாள்.

அன்னபூரணி அவளைத் தொடர எண்ண—

''அன்னம், அவ பின்னாடி போகாதே. கைகால் அலம்பிண்டு வரட்டும். அவசரப்படாதே.'' தாழ்ந்த குரலில் கட்டளையிட்டார் சபேசன்.

''வாசல் கதவைத் தாழ்ப்பாள் போட்டு மூடிவிடட்டுமா?'' அன்னத்தின் குரலில் படபடப்பு.

''அசடே! வாசல்லே ஆட்டோ வந்து நின்று பெண் இறங்கி வந்ததை பக்கத்து வீட்டுக்காரி பார்த்திருப்பாள். உடனே வாச கதவைச் சாத்திவிட்டால்...விசாரணைன்னு பளிச்னு தெரியும். சும்மா இரு. அவளே ஆரம்பிக்கட்டும்.''

ரகு பத்திரிகையை டீபாயின் மீது வைத்தான். டைரியைப் பிரித்தான்.

''தந்தி கொடுத்தபடியே சுபத்ரா வந்து சேர்ந்து விட்டாள். அதிசயமாக அம்மா

ஆத்திரப்பட, அப்பா நிதானத்துடன் இருக்கிறார். சம்பாதிக்கிற பெண் என்றால் எல்லா அப்பாக்களும் இப்படித்தான் இருப்பார்களோ? என்னதான் சம்பாதித்தாலும் அம்மாவின் மனசு மாத்திரம் ஒரே மாதிரிதான் இருக்கும்.'' என்று எழுதினான்.

இதோ சுபத்ரா. சில்லென்ற தண்ணீர் அவள் முகத்தைத் தற்காலிகமாக மலரச் செய்திருந்தது. கண்களில் மட்டும் சோகம் பிடிவாதமாக அமர்ந்திருந்தது.

பீரோ முன் நின்று நெற்றியில் குங்குமம் இட்டுக் கொண்டாள்.

மோடா ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு சுபத்ரா உட்கார்ந்தாள். ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்தபடி அன்னபூர்ணி நின்றாள். ரகு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

சுபத்ரா நிதானமாக ஆரம்பித்தாள். கழுத்தில் இருந்த தாலிக் கயிற்றை நெருடியபடியே சொல்ல ஆரம்பித்தாள்.

அம்மாவின் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டது. 'அடிப் பாவிப் பெண்ணே. ஐந்து நாட்களாக ஆஸ்பத்திரியில் இருந்தாயா....'

சபேசனுக்கும் முதுகுத்தண்டில் ஐஸ்கட்டி வைத்த நிலை. 'ஆபீசுக்குப் போகாமல் ஆஸ்பத்திரியில் ஐந்து நாட்கள்! அதுவும் சென்னையில் இல்லாமல் பெங்களூரில்! பேஷ்!'

அவருக்குக் கோபம் குமுறிக் கொண்டு வந்தது. சுவரில் மாட்டியிருந்த சுபத்ரா—விசு கல்யாணப் போட்டோவைப் பார்த்தார். தமிழ் வாத்தியாருக்கு இப்படியொரு மாப்பிள்ளை!

விசு படித்தவன். நல்ல குடும்பம்தான். எவ்வளவு விமரிசையாகத் திருமணம் நடத்தி வைத்தார்! பலபேர்களிடம் கடன்பட்டு ...ம்...எல்லாம் பட்டுப் போயிற்றே? மூன்றே வருடங்களில் சுபத்ராவை வீட்டுக்குத் துரத்தி விட்டானே. இந்த விசு? சே, என்ன ஆண் பிள்ளை....

சுபத்ரா மௌனமாக இருந்தாள். 'அஞ்சு நாளா ஆஸ்பத்திரியில் இருந்தேன் என்ற இந்த நான்கு சொற்களுக்கே இவ்வளவு பாதிப்பு இருக்கே... போகப் போக நான் சொல்வதற்கு என்னமாய்க் குமுறி, வெடிக்கப் போகிறார்களோ' என்ற நினைப்பில் தம்பி ரகுவைப் பார்த்தாள். அவன் வேகமாக டைரியில் எழுதிக் கொண்டிருந்தான். பாவம். இரண்டு வருஷங்களுக்கு முன்னால் கடும் ஜுரத்தில் நாக்கு இழுத்துக் கொண்டு, பேச்சுப் போயிற்று. அது முதல் இப்படித்தான். எழுத்து, எழுத்து, எழுத்துத்தான்.

''ஏண்டி பொண்ணே? இப்படிதிடீர்னு ஆஸ்பத்திரிக்குப் போயிட்டே, எங்க கிட்டே ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போகக் கூடாதோ? அதுவும் பெங்களூர் என்ன வேண்டிக்கிடக்கு? உன்னே வேண்டாம்னு நிர்த்தாட்சண்யமா துரத்திட்டு அம்மாவே உலகம்னுஇருக்கானே புருஷன்? அவனைப் பார்க்கப் போனியா?'' ஒரே மூச்சில் கத்திவிட்டு, புடவைத் தலைப்பால் வாயைப் பொத்திக் கொண்டாள் அன்னபூரணி.

''அம்மா....என் கழுத்திலே தாலி இருக்கிற வரைக்கும் விவாகரத்து கேஸ் முடியற வரைக்கும் — ஏன் அதுக்குப் பிறகும்—அவரை மரியாதைக் குறைவா, அவன் இவன்னு பேசாதே...'' சுபத்ராவின் சொற்களில் உஷ்ணம் இருந்தது.

அம்மா ஆச்சரியப்பட்டாள். அப்பா பற்களைக் கடித்தார். மரியாதையாம் மரியாதை... விசுவிற்கு?

''ஏண்டி சுபத்ரா, உங்கம்மா கேக்கறதிலே என்ன தப்பு? மரியாதைங்கிறதை கொடுத்து வாங்கணும். ஒன் வே டிராஃபிக் இல்லே.... உன்னே வீட்டுக்குத் துரத்தி அனுப்பிச்சானே... சரி... அனுப்பிச்சாரே—அப்ப எவ்வளவு நிஷ்டூரமாப் பேசிட்டுப் போனார்....? ம்... 'உங்க பெண்ணுக்கு இவ்வளவு வயசுக்குப் பிறகு கல்யாணம் பண்ணி யிருக்க வேண்டாம். உடம்பிலே கோளாறு இருக்கு... குழந்தையைத் தர முடியல்லே... இந்த அழகிலே அம்மா பேச்சை மீறி வரதட்சிணை இல்லாமல் இவளைக் கல்யாணம் பண்ணிண்டேன்... எனக்கு இதுவும்வேணும் இன்னமும் வேணும் சரி... இவளும் விவாகரத்துக்குச் சம்மதிச்சுட்டா. என்னாலே இவளோட சேர்ந்து வாழ முடியாது. இங்கேயே இருக்கட்டும்.'' இப்படித்தானேடி கத்திட்டுப் போனார் அன்னிக்கு?... ஆச்சு, விளையாட்டுப் போல ஒரு வருஷம் ஓடிப்போச்சு.''

அப்பாவுக்கு வியர்த்தது. நெஞ்சு வலி. ஊஞ்சல் நின்றது. அன்னம் கணவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள். சுபத்ரா வேகமாக உள்ளே சென்று ஜலம் கொண்டு வந்தாள்.

''அப்பா...அப்பா... இப்போ எப்படிப்பா இருக்கு...'' கண்களில் நீர் மறைக்க, அப்பாவின் மார்பைத் தடவி விட்டாள், சுபத்ரா.

''இன்னும் சாகலேம்மா... உயிர் இருக்கு, இன்னும் எவ்வளவு அனுபவிக்கணுமோ?...'' மெலிதான குரலில் அவர் பேசியது சுபத்ராவைக் குத்தியது.

சாப்பாட்டுக்குப் பிறகு அன்னபூரணி மெதுவாக ஆரம்பித்தாள்.

நண்பர், பாடகரிடம்: ''அதென்னவோ தெரியலே, உங்க பாட்டைக் கேக்கறபோதெல்லாம், எனக்கு எலக்ட்ரிக் ட்ரெயின்லே போற ஒரு ஃபீலிங் வந்துடுதே.'' -பாபு



Peerlesse
Peerlesse
VANISHING
CREAM






அறிமுக திட்டம்
தனிச் சிறப்பான
பலநோக்கு
சீப்பு ஒன்று,
ஒவ்வொரு
35 கிராம்
ஜாடியோடும்
இலவசம்.

ஈஸிச்சேரில் சாய்ந்திருந்தார் சபேசன். ரகுவின் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

''அம்மா... நான் சொல்றதைப் பொறுமையாக் கேள்... நான் பெங்களூர் ஆஸ்பத்திரியில்தான் தங்கியிருந்தேன். அபார்ஷன் கேஸ்'' மெதுவான குரலில் சொன்னாள் சுபத்ரா.

சபேசன் நிமிர்ந்தார். அன்னபூரணிக்குத் தொண்டை அடைத்தது. ரகுவின் கண்கள் இமைக்க மறந்தன.

புடவைத் தலைப்பைத் திருகிக்கொண்டே சுபத்ரா மேலும் பேசினாள்:

''அம்மா ஏன் இப்படித் திகைச்சுப் போயிட்டே? மலடின்னு பேர் வாங்கிண்டு வந்தவள் எப்படி அபார்ஷன் கேஸ்... அவசரப்படாதே அம்மா. எனக்கு ஏன் அபார்ஷன்? என் கல்யாண வாழ்க்கையே சிதைஞ்சு போயிடுத்து. என் சிநேகிதி ஒருத்திக்குச் சிக்கலான நேரம்....'' சுபத்ராவின் நா வறண்டது.

சபேசனுக்கும், அன்னபூர்ணிக்கும் புதுத் தெம்பு வந்தது.

''ஏண்டி சுபத்ரா கண்ணு, இந்த விஷயத்தை வந்தவுடனே சொல்லியிருந்தால் எவ்வளவு நன்னாயிருந்திருக்கும்? ஏன் கடுதாசி போட்டிருக்கலாமே பெங்களூரிலிருந்து?.... பெண்ணுக்குப் பெண் உபகாரம் செய்யறது தப்புன்னு நாங்க சொல்வோமா? பைத்தியம் எங்களை இப்படிக் கதிகலங்க வைச்சுட்டியே?'' அம்மாவின் பேச்சில் நிதானமும், பாசமும் இழைந்தன.

சபேசன் நிம்மதிப் பெருமூச்சு விட்டார். அப்பாடி.... பெரிய ரிலீஃப்...

''அம்மா.... கடுதாசி போட •மனசில்லே. விஷயத்தை நேரே சொல்லலாம்னுதான்... கவலைப்படக் கூடாதேன்னுதான் தந்தி அனுப்பினேன்....'' அவள் குரலில் படபடப்புக் கூடியது.

சுபத்ரா சற்று தயங்கினாள். மேலே விஷயத்தைச் சொல்லலாமா? அம்மாவின் முகத்தைப் பார்த்தாள். கண்களில் கலவரம் நீங்கியிருந்தது. ஆனாலும் பெண் மணவாழ்க்கையை அனுபவிக்காமல் இப்படி மர வாழ்க்கையில் சுழலுகிறாளே என்ற ஆதங்கம் தெரிந்தது.

''சுபத்ரா, யாருடி அந்த சிநேகிதி?... எப்படி உனக்குத் தகவல் வந்தது?'' அம்மாவின் குரலில் ஆவல்.

''...அம்மா ரொம்ப நாளாகவே அவள் எனக்குப்பெங்களூரிலிருந்து கடிதம் போட்டுக் கொண்டிருந்தாள். பம்பாயிலிருந்து மாற்றலாகி வந்த பெண். அப்பா அம்மா கிடையாது. அத்தை வீட்டில்தான் இருந்தாள். அத்தை வீட்டில் திடீரென்று டில்லிக்குப் போய்விட்டார்கள். இவள் மட்டும் இன்னொரு சிநேகிதியுடன் தங்கியிருந்தாள். வேலைக்குப் போகும் பெண்...'' சற்று நிறுத்தினாள்.

அம்மா பெருமூச்சு விட்டாள். ''சரிதான். விஷயம் புரிஞ்சு போச்சு. யாரோ சிநேகிதம்: கண்டிக்க ஆள் இல்லே. சிக்கலாப் போச்சு... கன்றாவி....'' அம்மா வெகு வேகமாக முடிவுக்கு வந்து கேட்டாள்: ''ஏண்டி சுபத்ரா, இப்போ திடீர்னு



பாடகர்: (தன் கோஷ்டியிடம்) ''எல்லோரும் மறக்காமல் ஹெல்மெட் கொண்டு வந்திருக்கீங்களா?''

ஒருவர்: ''எதுக்குக் கேட்கறீங்க?''

பாடகர்: ''கூட்டம் அதிகமா வந்திருக்கறதைப் பார்த்தா கலாட்டா பண்ண வந்திருப்பாங்களோன்னு சந்தேகமாயிருக்கு!''

- கபிலா நாதன்

வந்துட்டே! அந்தப் பெண் எங்கே தங்கியிருக்கு?''

''அந்தத் தோழியை இந்தக் கதிக்கு ஆளாக்கினவரிடம் போய்ப்பேசி சமாதானம் சொல்லி, மேலே ஆகவேண்டியதைச் செய்யச் சொல்லிவிட்டு வந்தேன்.''

''பரவாயில்லையே?... நல்ல காரியம் செய்தாய். இந்த ஆண்பிள்ளைகளுக்கு என்ன அவசரம் போ. கல்யாணத்துக்கு முன்னாடியே...இப்படி...சே!'' அம்மா அலுத்துக் கொண்டாள்.

''... ஒரு விதத்திலே நல்லதுதானேம்மா? வரப்போற பெண் மலடியில்லேன்னு இந்த அபார்ஷன் சொல்லிடுச்சே?'' என்று சொல்லிவிட்டு வாய்விட்டுஅழுதாள் சுபத்ரா.

சபேசன் அதிர்ந்தார். அம்மாவுக்கு உடம்பில் நடுக்கம். ரகுவுக்குப் புரிய ஆரம்பித்தது. அந்த சிநேகிதியின் ஆஸ்பத்திரி சூழலுக்கு அக்கா ஏன் இவ்வளவு ஈடுபாடு கொண்டாள் என்று தெளிவாகப் புரியலாயிற்று.

''...சுபத்ரா... நீ சொல்றதைப் பார்த்தால்... அப்படியா... கொடுமை'' என்றார் சபேசன்.

அன்னபூர்ணி தலையில் அடித்துக் கொண்டாள்.

சபேசனுக்கு நம்பவே முடியவில்லை. இவ்வளவு திடமான மனசு என் சுபத்ராவுக்கு எப்படி வந்தது? ம்.... சின்ன வயசிலே, 'வாசுகி'ன்னு பெயர் வைச்சேன். கல்யாணப் பத்திரிகையிலும் வாசுகி என்ற சுபத்ரான்னு போட்டேன். திருவள்ளுவர் மேலே எவ பக்தியின் எதிரொலியா அந்தப் பேர்... ஓ!.. என் பெண் செய்தது நியாயம்தான்.

ரகுவுக்குப் பெருமை பிடிபடவில்லை. டைரியில் எழுதினான். உற்சாகத்துடன் எழுதினான்.

''அக்கா... அடிக்கடி அப்பா சொல்வாரே திருக்குறளைச் சொல்லி. அது மாதிரி உனக்கு தீங்கு செய்தவருக்கு அவர் நாணும்படியா வேலை செய்துட்டே. யூ ஆர் கிரேட் சுபத்ரா...''

சபேசன் அந்த வரிகளைப் படித்தார். கண்களில் நீர் வழிந்தது. அன்னபூர்ணியால் ஜீரணிக்க முடியவில்லை.

# வெளிநாட்டிலிருந்து சில மாணவர்கள்



மிஸ் லோரன்ஸும் திரு அல்ஃபாவும்



திரு டேனியல்



திரு கிரிஸ்டஃபர்



திரு டேவிட்

## கஷ்டமான இசை; ஆனால் வித்தியாசமானது!

பிரான்சு நாட்டிலிருந்து வந்திருக்கும் இளைஞர் அல்ஃபா டியல்லோ, சென்னையில் இசைக் கலைஞரும் மிருதங்க வித்வானும் ஆன திரு டி. வி. கோபாலகிருஷ்ணனிடம் மிருதங்கம் கற்றுக்கொள்கிறார். ''அமெரிக்காவில் எல். சங்கர் — அல்லா ராக்காவின் மகன் ஜாகிர் உசேன் சேர்ந்து நடத்தும் 'சக்தி' இசைக் குழு வாயிலாகவே நான் இந்திய இசை பற்றி அறிந்தேன். அங்கேயெல்லாம் இந்திய இசை என்றால் ரவிசங்கர் தான் நினைவுக்கு வருவார். ஆனால் இந்துஸ்தானி இசைக்கும், கர்நாடக இசைக்கும் என்ன வேறுபாடு என்று தெரியாமல் இருந்தது எனக்கு! இந்தக் கர்நாடக இசை சற்று கடினமானதாய் இருக்கிறது. அதனாலேயே அது வித்தியாசமாயும் இருக்கிறது. இப்படி வித்தியாசமானதாலேயே அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆவல் உண்டாயிருக்கிறது!'' என்கிறார் இவர்.

## பெண் மிருதங்க வித்துவான்!

● மிஸ் லோரன்ஸும் பிரஞ்சுக்காரர்தான். இவரது குரு திரு டி.ஹெச். விநாயகராம். கற்கும் வாத்தியம்: மிருதங்கம்!

''நீங்கள் ஏன் மிருதங்கம் கற்க வேண்டும் என்று ஆசைப்பட்டீர்கள்?''

''இதன் ஓசையும் நயமும் என்னை ஈர்த்திருக்கிறது. அது மட்டுமல்ல, எனக்கென்னவோ இதை நான் உண்மையாகவே விரும்புகிறேன் என்று தோன்றுகிறது. எங்கள் நாட்டுக்குத் திரும்பிய பிறகும் உழைத்து வாசிப்பேன். விட்டுவிட மாட்டேன்!'' என்னும் மிஸ் லோரன்ஸ், வடக்கே இருந்ததைவிட தெற்கே மக்கள் தம்மிடம் இன்னும் சிநேகமாக இருப்பதாகத் தெரிவித்தார்.

## புல்லாங்குழலும் அக்யு பங்க்சரும்

● ஆஸ்திரேலியாவிலிருக்கும் ஸிட்னி நகரத்திலிருந்து வந்திருக்கும் செர்ரி வோஸ் கற்றுக்கொள்வது புல்லாங்குழல். சென்னை சகோதரர்கள் ரகு — ரவியிடமும் அவர்கள் தகப்பனார் திரு சுந்தரத்திடமும் கற்று வருகிறார்.



டி. வி. கோபாலகிருஷ்ணன்

''இங்கே குறைந்த செலவில் குருவிடம் நேரடியாகக் கற்கும் அனுபவம் கிடைப்பது மட்டுமல்ல, குற்றம் இருந்தால் உடனடியாகத் திருத்திக் கொள்ளவும் முடிகிறது. மேற்கே இந்த குரு-சிஷ்ய முறை இல்லையே!''

''ஸ்விட்ஸியில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்?''

''நான் பல் வைத்தியராக இருக்கிறேன்!'' என்றார் செர்ரி. இவருக்கு ஆர்வம் இருக்கும் இன்னும் இரண்டு துறைகள் அக்யுபங்சர், ஹிப்னாஸிஸ்!

### எட்டுமணி நேர அசுர சாதகம்

ஸ்விட்ஸர்லாந்து நாட்டுக்காரரான கிறிஸ் டஃப்பர் கட்டடக் கலை நிபுணர். ஒருவரது அலுவலகத்தில் பணி புரிபவர். இங்கே சென்னையில் ஓராண்டு காலமாக இவர் பயிலுவது வீணையும், புல்லாங்குழலும்.

''என் பெயரைக் குறிப்பிடுவதை விட, புல்லாங்குழலுக்கு என் குரு திரு.என். ரமணி என்பதையும், வீணைக்கு குமாரி வி. என். கல்பகம் என்பதையும் மறவாமல் குறிப்பிடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

''ஒரு நாளைக்குச் சுமார் எத்தனை மணி நேரம் பயிற்சி செய்கிறீர்கள்?'' என்று கேட்டபோது இவர் அளித்த பதில்:

''குறைந்தது ஏழு மணி அல்லது எட்டு மணி நேரம் பயிற்சி செய்வேன்!''

### தகிட தகிட தத்தகிட...

திரு டேனியல் பிரான்ஸ் நாட்டுக்காரர். இரண்டு வருடங்களாக சென்னையில் தபலா கலைஞர் நீலகண்ட ராவ் ஆப்தே அவர்களிடம் தபலா வாசிக்கப் பயிற்சி பெற்று வருகிறார்.

தகிட தகிட தத்தகிட என்று சில சொற்கட்டுக்களை அநாயாசமாக வாயால் உதிர்த்துவிட்டு, 'எப்படி என் பயிற்சி?' என்று கேட்பது போல் ஒரு புன்னகை புரிந்தார் டேனியல்.

### அல்ஜீரியா—டு—கொட்டிவாக்கம்!

டூஃபிக் என்ற வசீகரமான இளைஞர் திரு கே. வி. நாராயணசாமியிடம் கர்நாடக இசை பயிலும் அல்ஜீரியாக்காரர்.

''பழங்களும் தேனும் மட்டுமே உண்ணும் டூஃபிக், அசைவ உணவே தொட மாட்டார். சங்கீதம் கற்பதில் இருக்கும் ஆர்வத்தைப் பக்திக்கு ஈடாகச் சொல்லலாம். அவரை ஒரு முறை காஞ்சிப் பெரியவரிடம் அழைத்துக் கொண்டு போய், அநுக்கிரகம் பண்ணச் சொல்லி வேண்டிக் கொண்டேன்'' என்று தெரிவித்தார் திரு கே. வி. என்.

திருவான்மியூரை அடுத்த கொட்டிவாக்கத்தில் தற்போது வசிக்கிறார் டூஃபிக்.

இந்த மாணவர்களைச் சந்திக்க ஏற்பாடு செய்து தந்தவர் மிருதங்க வாத்தியக் கலைஞர் திரு டி. வி. கோபாலகிருஷ்ணன்.

''இவர்களுக்கு ஆர்வம் இருப்பது பாராட்டப்பட வேண்டியதுதான். ஆனால் அவர்கள் அத்தனை சீரியஸாக நமது இசையைக் கற்றுக் கொள்கிறார்களா?'' என்று டி.வி.ஜி.யைக் கேட்டோம்.

இவர்களது அக்கறையை மிகவும் சிலாகித்துப் பேசினார் திரு கோபாலகிருஷ்ணன். ''இல்லையென்றால், நாடு விட்டு நாடு வந்து, பொருளாதாரப் பிரச்னைகளையும் பொருட்படுத்தாமல் இவர்கள் இசையே உயிராய் இங்கே இருப்பார்களா?'' என்றார்.

கட வாத்தியக் கலைஞர் திரு டி. ஹெச். விநாயகராம் ஒரு தகவல் தந்தார்:

''நாங்கள் இவர்களுக்கென்றே முழுப் பயிற்சியையும் மூன்று மாதத்துக்குள் வருகிறப்போல் சுருக்கிக் கொடுக்கிறோம். அவர்கள் தாயகம் திரும்பிய பிறகு கேஸட் டேப்புகளை அனுப்பி வைத்துப் பயிற்சியைத் தொடருகிறோம். என்னிடம் ஒரு ஜப்பானியர்கூட இப்படித்தான் பயின்றார். மறுபடி இவர்கள் இந்தியா வருகிறபோது நேரிடைப் பயிற்சியைத் துவக்குகிறோம்.''

எப்படியோ, கர்நாடக இசை, உலகத்தை அழைக்கிறது!

—சாருகேசி, தமயந்தி

புகைப்படங்கள்: பேபி போட்டோ ஸ்டுடியோ



### பாடுவதன் பலன்!

நான் பத்ரிநாத் போயிருந்தபோது சங்கரர் மேல் நான் இசைத்திருந்த ஒரு பாடலை (பதினொரு ராகங்களுடன் சங்கர சரித்திரத்தை) அங்குள்ள ஸ்ரீசக்கரத்தோடு கூடிய ஸ்ரீ மகா லக்ஷ்மி மண்டபத்தில் ஆதி சங்கரர் சிலை அருகில் உட்கார்ந்து பாடி முடித்து மனம் உருகின வேளையில் சங்கரர் தலையில் இருந்த புஷ்பம் என் அருகில் வந்து விழுந்தது.

பிரஸாதம் கிடைத்த மகிழ்ச்சியில் வெளி வருகையில், என் பின்னேயிடம் என்னைப் பற்றி ஒருவர் கேட்டறிந்து கொண்டு என் அருகில் வந்து, ''அம்மா, நீங்கள் ரொம்பவும் புண்ணியம் செய்திருக்கிறீர்கள். பாடல்களில் ராகங்களும் சொற்களின் பொருளும் ரொம்பவும் பாவபூர்வமாக அமைந்திருக்கின்றன. இந்த உயர்ந்த ஞானம் பெற்ற உங்களைப் பார்த்து பாடலைக் கேட்க ரொம்ப சந்தோஷம்'' என்று சொன்னார்.

அவரை நிமிர்ந்து பார்த்தபோதுதான் பிறவி இசை மேதை ஸ்ரீ எஸ். பாலசந்தர் என்று அறிந்தேன். எப்பேர்ப்பட்ட பெருந்தன்மை! நான் பாடுவதன் பலனை அன்றுதான் கிடைத்தது.

- கமலா தியாகராஜன்



# கன்னியரின் பூவுடலில் பளபளக்கும்
# காஞ்சிபுரம் பட்டுப் புடவைகள்




காஞ்சிபுரம் ● தர்மாபுரம் ● ஆரணி ● பனாரஸ் பட்டுப் புடவைகள்
பட்டு வேட்டிகள் மற்றும் ஜவுளிகள்

கல்லூரியில் மாணவர் பேரவைத் தலைவர் தேர்தல் நடந்து முடிந்த நேரம். ரங்கராஜன் (பி.ஏ. இறுதியாண்டு) வெற்றி பெற்றிருந்தான். அமைதியானவன். மரபு வழியில் பக்குவமடைந்திருந்த மனம். கட்சி சாயம் பூசாமல், வண்ணப் போஸ்டர்கள்ஒட்டாமல் எல். எஸ். டி. சப்ளை செய்யாமல் தனித்து நின்று பெற்ற வெற்றி அது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள். கல்லூரியில் நல்ல பெயர். தனிப் பிரிவுகளுக்கென்று வரும்போது க்ரூப்பிஸம் தலைதூக்கினாலும், தலைவர் பதவிக்கு 90 சதவீதம் ஓட்டு மொத்தமாக விழுந்திருந்தது.

அவன் பிடரியை அசைத்துக் காட்டவில்லை. ஆனால் அந்த 90 சதம் வாலை விரித்து ஆட்டிக் காட்டியது வான்கோழியைப் போல். பத்துக்குப் பொல்லாத எரிச்சல். வலிக்க வலிக்க ஒவ்வொரு இறகாகப் பிடுங்கி எறிய இஸ்மாயில் — முத்துசாமி கூட்டுத் தலைமையில் ஒரு கூட்டம் காலம் கனியட்டும் என்று காத்திருந்தது.

அது விரைந்து வந்தபோது....

சினிமா விளம்பரம். கமிங் ஷார்ட்லி. ஸ்ட்ரிக்ட்லி ஃபார் அடல்ட்ஸ் ஒன்லி. தினசரிகள் எல்லாவற்றிலும் ப்ராமினென்டாக டிஸ்ப்ளே செய்திருந்தார்கள். ஃப்ரெஞ்சுப் படம். — ஆங்கில ஸப் டைட்டில்களுடன்.

ஜட்டியுடன் (நல்ல காலம்) ஒருத்தி காலைப் பரப்பிக் கொண்டு நின்றிருந்தாள். நாபிச் சுழியிலிருந்து கணுக்கால்வரை இரு அழுத்தமான கோடுகள். மாஜிக் ஷோவில் விரைப்பாக அந்தரத்தில் படுப்பதைப் போன்று, முழங்கால் முட்டுக்களை இணைக்கும் வகையில் ஒருவன் படுத்திருந்தான். 45 டிகிரி கோணத்தில் கத்தி ஒன்று அவன் நெஞ்சில் பாய்ந்திருக்க, இரத்தம் கீழே உறைந்திருந்தது. அந்த ஏ முத்திரைக்கு மேல் அவள், காமக்கிறக்கம் கண்களில் நடனமாட, மூடப்படாத பெரிய மார்பகங்களைத் தன் கைகளால் மறைக்க முயன்று தோற்றுக் கொண்டிருந்தாள். வாசகங்கள் சுண்டி இழுத்தன.

காலேஜ் கேம்பஸில் இதே பேச்சு. 'சீச்சீ' என்று சொல்லிக் கொண்டே ஜெண்ட்ஸ் கமெண்ட்ஸ்களை ஒட்டுக் கேட்டு ரசித்தார்கள் லேடி ஸ்டூடண்ட்ஸ்.

ஆயிரம் மனமாச்சரியங்கள் இருந்தாலும் மெஜாரிட்டி மாணவர்கள் ஒன்றுபடும் ஃபீல்டுகளில் சினிமாவும் ஒன்றுதானே. பிக்சர் ஃபீவர் பிக்-அப் செய்ய ஆரம்பித்தது. தேர்தல் ஜுரம் தற்காலிகமாகத் தணிந்தது. இஸ்மாயில் — முத்துசாமி தலைமையில் திட்டம் உருவாயிற்று.



முதல் நாள் பகல் காட்சி — அன்ரிசர்வ்டு க்ளாஸில் ப்ளாக் புக்கிங் — தியேட்டர் மானேஜர் மறுத்தால் அடிபடுவார்.

லீவு வேண்டும் — தனித் தனியே லீவ் போடுவானேன்? எவனும் க்ளாஸுக்குப் போகப் போறதில்லே. பொட்டைப் பசங்களுக்கு மட்டும் க்ளாஸ் நடத்தணுமா என்ன? ஏற்கனவே டாப் டென் லிஸ்டை அவங்க தான் ஆக்கிரமிச்சுக்கிட்டிருக்காங்க. ஒண்ணு ரெண்டைத் தவிர — கட்டுப் பெட்டிகளுக்குப் படிக்கிறதை விட்டா வீட்டிலே வேறே வேலே கிடையாது. ஸோ வாட் காலேஜுக்கு ஒரு நாள் லீவு விடணும், இழுத்து மூடணும்....

ஓப் பிரின்ஸிபாலுக்கு ஜெனுயினு ஒரு காரணம் காட்டணும் — ஆங் —அன்றைய தினம் இருக்கவே இருக்கு ஹர்த்தால்—அனௌன்ஸ் பண்ணினவன் உதிரிக் கட்சியா இருந்தா என்ன, பிகபிகத்தா என்ன? அசெம்பிளியிலே அந்தக் கட்சிக்கார எம். எல்.ஏ. ஒருத்தருங்கிடையாதுங்கறதெல்லாம் தேவையில்லாத பிரச்னே. ஹர்த்தாலுக்கு ஆதரவு காட்டி ஊர்வலத்திலே கலந்துக்க லீவு வேணும்—அவ்வளவுதான்.

முசுடு பிரின்ஸிபாலே யார் அப்ரோச் பண்றது? வேறே எவன் போவான்? மாணவர் தலைவன் எதுக்கிருக்கான்? ரங்கராஜன்தான் போகணும்.

''யா-யா'' என்று ஆமோதித்தார்கள் அனைவரும்.

அப்பட்டமாக மறுத்துவிட்டான் ரங்கராஜன். ''சாரி ஃப்ரெண்ட்ஸ். அரசியல் கட்சிக்காரங்க ஹர்த்தால் அனௌன்ஸ் பண்றதெல்லாம் மோஸ்ட்லி பப்ளிசிடி ஸ்டண்ட்தான். இந்தக் கேஸிலே பாருங்க விலைவாசி உயர்வை எதிர்த்து ஹர்த்தாலாம். முழு வெற்றியடைய வாய்ப்பு இருக்குன்னே வச்சுக்குவோம். என்ன ஆகப் போகுது? அடுத்த நாள் கடையடைப்புன்னு தேவையானஅத்தியாவசியப் பொருட்களையெல்லாம் முந்தின நாளே வாங்கி வச்சுக்கணும்.

ஹெவி டிமாண்ட் காரணமா இல்லே... தீர்ந்து போச்சுன்னு சொல்லிக்கிட்டே விலே ஏத்தி உள்ளே இருந்து எடுத்து வந்து விற்கப் போறான் கடைக்காரன். இந்த ஃபீவர் அடங்க ரொம்ப நாளாகும். ரீடெயில்லே ஏறின விலே இறங்கறது அபூர்வம். விலைவாசி ஏற்றம்தான் முடிவு. கஷ்டப்படப் போறது நாமதான். ரேஷனலா திங்க் பண்ணிப் பாருங்க. ஊர்வலத்திலே நாம—ஸ்டூடன்ட்ஸ் — கலந்துக்கறது தேவையில்லாதது. நமக்கு அரசியல் வேண்டாம். சாரி ஃபார் டிஸ்அப்பாயிண்டிங் யூ'' என்று ஒரு குட்டி லெக்சரே அடித்து விட்டான்.

சினிமா ப்ரோகிராமில் இருந்த ஆர்வம் பாதிப் பேருக்குக் குறைந்து விட்டது.

இஸ்மாயில் — முத்துசாமிக்குக் கடுப்பு.

போதாததற்கு பிரின்ஸ்பால் வேறு இருவரையும் அழைத்தார். ''பாய்ஸ், கேள்விப் பட்டேன். இந்த மாதிரி முட்டாள்தனமான விஷயங்களில் மத்தவங்களைத் தூண்டிவிடற நடவடிக்கைகளிலே ஈடுபட்டா டி. ஸி. கொடுத்து அனுப்பவேண்டி வரும். பீ கேர்ஃபுல்'' என்று மிரட்டினார்.

வகுப்பறையில், ''லேடீஸ் அண்ட் ஜென்டில்மென்! இன்றைக்கு ஒரு டைவர்ஷன். வெற்றி வீரனாக சீஸர் ரோமுக்குள் நுழைந்த போது நடைபெற்ற அணிவகுப்பு சிறந்ததா இல்லே, இன்றைய அரசியல் கட்சிகள் நடத்தும் ஹர்த்தால் ஊர்வலங்கள் சிறப்புடையதா என்ற தலைப்பில் ஒரு பட்டி மன்றம் நடக்கும். ரங்கராஜன் இந்த க்ரூப்பிலே இல்லாததாலே எதிரும் புதிருமா இஸ்மாயிலும் முத்துசாமியுமே இருந்து வாதாடுவார்கள்'' என்று பெண்களின் களுக்கல்களுக்கிடையே ஆங்கிலப் பேராசிரியர் கிண்டல் செய்தார். தலைவர்களுக்குக் கோபம் கொப்பளித்தது.

ஹார்டு லைனர்ஸ் ஒன்று சேர்ந்தார்கள். பிக்சர் ஃபீவருக்கு அடிமைப்பட்டு ஏமாந்தவர்களோடு சேர்ந்த 10 இப்போது 50 சதமாக உயர்ந்திருந்தது. முடிவெடுத்தனர்.

'தலைவர்களுக்கு (!) ஏற்பட்ட அவமானத்துக்குக் காரணம் ரங்கராஜன்; பிரின்ஸிபாலுக்கும்' ஆங்கிலப் பேராசிரியருக்கும் தெரிந்து விட்டது என்றால் அவனைத் தவிர வேறு யாரும் சொல்லி யிருக்க முடியாது. பச்சோந்தி — துரோகி — நாளைக்கு எதை எதைச் சொல்லித் தூபம் போடுவானோ—போட்டுப் பொளந்தால்தான் சரிப்படுவான்; மத்தவங்களுக்கும் எச்சரிக்கையாக அமையும். அடுத்த நாள் காலையில் அவன் சைக்கிளில் காம்பஸுக்குள் நுழையும்போது எதிரே இன்னொரு சைக்கிள் மோதும். வாக்குவாதம்—கைகலப்பு — இரண்டு சொட்டு இரத்தமாவது பார்த்தாக வேண்டும்.'

அடுத்த நாள்நடந்து முடிந்தபோது ரத்த ஆறே ஓடி உறைந்தது.




ரங்கராஜன் அடிபட்டு விழுந்தபோது அவனது ஆதரவாளர்கள் உதவிக்கு வந்தார்கள். ஹார்டு லைனர்ஸ் மறு பக்கம். ஃப்ரீ ஃபார் ஆல். வசவுகள். அழுகல் வார்த்தைகள். அடிதடி.

இஸ்மாயீல் வீசிய அரைக் கல் டி.சி. கொடுக்கிறேன் என்று மிரட்டிய பிரின்ஸிபாலின் அறைக்குள் சீறிப் பாய்ந்தது.

பட்டி மன்றம் என்று கிண்டல் செய்த ஆங்கிலப் பேராசிரியரின் சைக்கிள் முத்து

சாமியின் கைவண்ணத்தால் உருத்தெரியாமல் போனது.

சந்தடி சாக்கில் அவனவன் தன் வன்மத்துக்கு வடிகாலாய் அங்கொன்றும் இங்கொன்றும் கற்களை எடுத்து வீச ஆரம்பித்தான்.

ஃபீவர் தொடர் சங்கிலியாய், தொற்று நோயாய்ப் பரவியது.

என்றோ ஃபுட் போர்டில் பயணம் செய்ய அனுமதி மறுத்த பல்லவன் அடிபட்டான். மூதாட்டி ஒருத்தி கல்லடி பட்டு உள்ளே மயக்கமுற்று விழுந்தாள்.

ட்ராஃபிக் ஸ்தம்பித்தது.

போவோர் வருவோர் மீது கல் விழுந்தால் கம்மா இருப்பார்களா என்ன? அருகில் ஒரு விறகுக் கடை சாதகமாய் அமைந்தது. கட்டையும் கையுமாகப்பொதுமக்கள் உள்ளே நுழைந்து மாணவர்களைத் தாக்கினார்கள்.

நிலைமை கட்டுக்கடங்காமல் போவதை அறிந்து போலீஸுக்கு போன் செய்தார்கள்.

விரைந்து வந்த போலீஸார் கேம்பஸுக்குள் நுழைந்து இரு தரப்பாரையும் விளாசினார்கள்.

போலீஸாரின் அராஜகத்தைக் கண்டிக்கும் வகையில் ஒன்றும் பாதியுமாய்க் கேள்விப்பட்ட இன்ன பிற கல்லூரி மாணவர்கள் 'சிம்பதடிக் ஸ்ட்ரைக்' என்று ஊர்வலமாக வந்து ஒரு போலீஸ் ஜீப்பைக் கொளுத்த முற்பட்டார்கள்.

நகரின்பல பகுதிகளில் தடியடிக் கண்ணீர்ப் புகை.

இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு வன்முறைக் கும்பல்கள் சோடா பாட்டில்கள் உதவியோடு கடைகளைச் சூறையாடினார்கள்.

நகரெங்கும் பீதி நிலவியது.

கைது செய்யப்பட்டவர்கள் போலீஸ் காவலில். தத்தம் கட்சிக்காரர்கள் ஆளும் கட்சியினர் தூண்டுதல் பேரில் கைது செய்யப்பட்டுள்ளார்கள் என்று அரசியல் பிரசாரம். காவல் நிலையம் முற்றுகையிடப்பட துப்பாக்கிச் சூடு...

அப்பப்பா....

சீப் இன்ஸ்பெக்டர்இப்ராஹிம் தம் இருக்கையில் அமர்ந்தார். தம்முடைய ஏரியாவைச் சுற்றிப் பார்த்துவிட்டு அப்படியே ஜீ. ஹெச்சில் நிலைமையை அறிந்துகொண்டு ப்ரிலிமினரி என்கொயரியை முடித்து, அப்போதுதான் திரும்பி யிருந்தார்.

ஃபோன் அலறியது. எடுத்தார். ''எஸ். ஐ. இப்ராஹிம் பேசறேன்'' என்றார்.

''நான் ....ஆஃபீஸிலிருந்து பேசறேன் எஃப். ஐ. ஆர். எழுதிட்டீங்களா?''

''காலேஜ் காம்பஸ் சமாசாரம்தானே... இன்னும் இல்லே.''

''கே ஸ்லோ வித் த பாய்ஸ்.''

''வாட்?''

''நான் சொல்லலே. ஐ ஆம் ஒன்லி கன்வேயிங் எ மெஸேஜ். லாக்-அப்பிலே முத்துசாமின்னு ஒரு பையன் இருக்கானில்லே. அவனுடைய அப்பாவுக்கு ஹை லெவல்லே கனெக்ஷன் இருக்கு... அதுதான்... புரியுது இல்லே.''

* * *

## கண் முன்னால் ராகதேவதை!





ஹனுமான்- ஸ்ரீராமர் உறவு போன்றது (யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்) என்னுடைய ஜீ.என்.பி. ரசனை.

''தொட்டதெல்லாம் பொன்னாக்கியவன்'' என்ற புகழுரை அமரர் ஜீ. என்.பிக்கும் சாலப் பொருந்தும். அவர் எடுத்துக் கையாண்ட ஒவ்வொரு ராகமும் பொலிவு பெற்று அழகிய மெருகு பெற்று அந்த ராக தேவதை சர்வாலங்கார பூஷிணியாய் நம் கண் முன் அழகுறத் தோன்றியதை நினைக்கும்பொழுது புல்லரிக்கிறது. குறிப்பாக சாரங்கா ராகத்தில் அவர் காண்பித்த நகாக வேலை கனை எப்படி மறப்பேன்? கச்சேரியின் எந்தக் கால கட்டத்தில்,எந்த ராகத்தை, எந்தக் கீர்த்தனையைப் பாடினால் வரவேற்பு இருக்கும் என்று கணிக்கிற ஆற்றல் அபாரமாய் இருந்தது அவருக்கு.

திருச்சி மலைக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் நடந்த கச்சேரிகளில் ஜீ. என். பி. கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை, பாலக்காடு மணி அய்யர், பழனி சுப்பிரமணிய பிள்ளை, ஆகியோர் கம்பீரமாக அமர்ந்து ஒருவருக்கொருவர் அளவு கடந்த அன்புடனும் மரியாதையுடனும் பழகிக் கொள்ளும் பாங்கினைப்பார்த்தோம். குறிப்பாக முதல் இருவரிடையே மகன்-தந்தை வாத்ஸல்யம் கண்டோம். ஜீ. என். பி. அவர்கள் பக்கவாத்தியக்காரர்களைத் தம் நாபிக்கமலத்திலிருந்து ஆத்மார்த்த அங்கீகாரம் செய்து உற்சாகப்படுத்தி எழுப்பின. ஆஹாகாரங்கள் இன்றும் என் காதுகளில் ஒலித்து அவர் பெருந்தன்மையை எனக்கு உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

வி. ஜீ. விசுவநாதன்

# உலகெங்கிலும் உள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு ரெஃப்ரிஜெரேட்டர் என்றால்

# Kelvinator®

## 140 க்கும் அதிகமான நாடுகளில் விற்பனை ஆகி ஸர்விஸ் செய்யப்படுவது.





உலகத்திலேயே மேன்மையான திறமைமிக்க மேலும் தொந்திரவு இல்லாத **கம்ப்ரெஸ்ஸர்** பொருத்தப்பட்டது. அந்தக் கம்ப்ரெஸ்ஸருக்கு இப்போது

**ஏழு வருடங்களுக்கு**

உத்திரவாதம் அளிக்கப்படுகிறது.



Mutual-2779 TM

கெல்வினேட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்கள் ஐந்து அளவுகளில் கிடைக்கின்றன: 286 மேலும் 165 (தானே இயங்கும் உறைபனி நீக்கும் ஸிஸ்டெத்துடன்), 135, 90 மேலும் 65 லிட். கெல்வினேட்டர் டீஃப்ரீஸர்கள் மூன்று அளவுகளில் கிடைக்கின்றன : 425, 275 மேலும் 85 லிட்.



விற்பனை மேலும் ஸர்வீஸ் செய்வோர் :

**எக்ஸ்போ மெஷீனரி லிமிடெட்.**

பிரகதி டவர், 6-வது மாடி, 26, இராஜீந்திரா ப்ளேஸ், புது டெல்லி-110 008.

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, சென்னை, புது டெல்லி, அஹமதாபாத், போபால், சண்டிகர், காஸியாபாத், ஹைதராபாத், பாட்னா.

எஸ். ஐ. இப்ராஹிமுக்கு எரிச்சலாக வந்தது. ''ஹூ நோ வாட் மை ப்ரிலிமினரி என்கொயரீஸ் ரிவீல்? இதை ஆரம்பிச்சு வச்சவங்க ரெண்டு பேர். இஸ்மாயில்—முத்துசாமி. டாம் ப்ளடி சினிமா ஃபீவர் விளைவுகள் எந்த அளவுக்குப் போயிருக்கு பார்த்தீங்களா?எல்லாத்துக்கும் அவங்கதான் பொறுப்பேற்கணும். ரையடிங், இன்சைட்மெண்ட், டாமேஜ் டு பப்ளிக் ப்ராபர்டி....''

''எனஃப். நான் சொல்ல வேண்டியது சொல்லிவிட்டேன். அப்புறம் உங்க இஷ்டம். பை த பை நீங்க ஏதோ டிரான்ஸ்ஃபர் ட்ரை பண்ணினீங்களாமே. நான் சொல்லி முடிச்சுத் தரேன்.''

செத்துப்போன ஃபோனை வெறித்துப் பார்த்தார் இப்ராஹிம். அவர் எப்போது மாற்றலுக்கு ட்ரை செய்தார்? இல்லவே இல்லையே... அப்போது முடிச்சுத் 'தர்றேன்னு சொன்னதற்கு என்ன அர்த்தம்?

அவருக்குப் புரிந்தது. 'கோ ஸ்லோ வித்த பாய்ஸ்'. இல்லையென்றால் டிரான்ஸ்ஃபர் நிச்சயம்.

குற்றவாளிகளுக்குத் தண்டனை வாங்கித் தராமல் தப்பிக்க விட்டு விட்டால், ஜி. ஹெச்சில் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும் நபர்களுக்கும், மார்ச்சுவரியில் கிடத்தப்பட்டிருக்கும் சடலங்களுக்கும் யார் பொறுப்பேற்பது?

வெளிக் கேட்டில் அந்த வயதானவர் பேசியது மீண்டும் ஒலித்தது.

''.....பசங்க மேலே குற்றம் சுமத்தறதிலே பிரயோஜனமே இல்லே, சார். ஒரு செய்கையினாலேயே ஏற்படக் கூடிய பின் விளைவுகளைச் சிந்திச்சுப் பார்க்கிற அளவுக்கு அறிவு விருத்தி சின்ன வயசிலிருந்தே வீட்டிலே வளரணும். அதுக்குப் பெற்றோருடைய ஒத்துழைப்புதான் முக்கியம். சட்டம் ஒழுங்கை மதிக்கத் தெரிஞ்சிருந்தா அந்தப் பசங்க இப்படிக் காலித்தனமா ஒரு காரியத்தை ஆரம்பிக்கத் துணிஞ்சிருப்பாங்களா? பேரண்ட்ஸை உள்ளே தள்ளணும். அதிலேயும் பாவம், தாயை அதிகம் குறை சொல்ல முடியாது. பிள்ளைங்க தகப்பனோட கண்டிப்புக்குத்தான் அடங்கும். பிரம்பைக் கையாளாத தந்தை ஒரு முட்டாள். ஹி இஸ் தி கிரிமினல்...''

எஸ். ஐ. இப்ராஹிம் தம் காக்கி உடைகளைக் களைந்து, லுங்கியில் தம்மை உருவகப் படுத்திப் பார்த்தார்.

இப்போது அவர் வெறும் இப்ராஹிம். இஸ்மாயிலின் தந்தை. பின் விளைவுகளுக்குப் பொறுப்பேற்க வேண்டியது அவர்தான்.

'சட்டம், ஒழுங்கை மதிக்கத் தெரியாத ஒரு மேஜர் பையனைக் கையில் வைத்துக் கொண்டு காவல் துறையில் பணியாற்றினால் ஊர் சிரிக்கும்; வீட்டுக்குத் திரும்பும் வழியில் ஒரு நல்ல பிரம்பு வாங்க வேண்டும்' என்று எண்ணிக் கொண்டார் அவர்.

''ஹை கனெக்ஷன்ஸ்... ட்ரான்ஸ்ஃபர்... ஹெல்ஸ் பெல்ஸ்'' உதடுகள் முணு முணுக்க எஸ். ஐ. ஆரை மறந்து தமது ராஜினாமாக் கடிதத்தை எழுத ஆரம்பித்தார் திரு இப்ராஹிம்.



## வாடிய உயிரும், தழைத்த இசையும்!

ஜம்முவில் உள்ள விமானப் படையில் என் கணவர் வேலை பார்த்து வந்தார். ஒருநாள் படையைச் சேர்ந்த தமிழர்கள் எல்லாம் ஒன்று கூடி பீர்புரா என்ற இடத்தில் பிக்னிக் போனோம். எங்களுக்கென ஏற்பாடு செய்யப்பட்ட வண்டியில் நாங்கள் எல்லோரும் திரும்பி வந்துகொண்டிருக்கும்பொழுது 'போர்' அடிக்காமல் இருக்க ஒவ்வொருவராகப் பாடச் சொன்னோம். எல்லோரும் சினிமாப் பாட்டுப் பாடினார்கள்

எங்கள் க்ரூப்பில் ஓர் இளைஞன், சந்தர் என்று பெயர். நன்றாகக் குடித்துவிட்டுப் பேசாமல் அமர்ந்திருந்தவன் திடீரென்று ''நான் பாடப் போகிறேன்''என்று சொல்லிப் பாட ஆரம்பித்தான். நன்றாகக் குடித்திருக்கிறான், ஏதோ உளறப் போகிறான் என நினைத்து நாங்கள் மனத்துக்குள் சிரித்துக் கொண்டிருக்கையில் மெதுவாக ஆரம்பித்தான். ஜேசுதாஸ், பாலமுரளி இருவரின் இருவர் குரலையும் இணைத்தாற்போன்ற குரலில் ஆபேரி ராகம் பாட ஆரம்பித்தபோது மூச்சுவிட மறந்து பாட்டில் லயித்து விட்டோம்.

கர்நாடக சங்கீதத்துக்கும் எனக்கும் மெட்ராஸுக்கும் ஜம்முவுக்கும் உள்ள தூரம். அப்படிப் பட்ட என்னையே அந்த ராகமும் பாட்டும் அவன் குரலும் மயக்கி விட்டன. பஸ்ஸிலிருந்து இறங்கிய பின்பும் அவன் குரல் ஒலித்துக் கொண்டே யிருந்தது என் காதில்.

அதன் பின் அவனை அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வரவழைத்துப் பாடச் சொல்லிக் கேட்பேன். எல்லோரும் குடித்தால் உளறுவார்கள். இவன் குடித்தால் அற்புதமாகப் பாடுவான். அவனை நான் எத்தனையோ முறை ஆபேரி ராகத்தைப் பாடச் சொல்லிக் கேட்டும் எனக்கு அலுத்ததில்லை, அவனுக்கும் அலுத்ததில்லை பாட.

இறைவனுக்கும் அவன் பாட்டைக் கேட்க வேண்டும் என்று தோன்றியது போலும். குடித்துக்குடித்து வயிற்றில் 'லிவர்' அழுகிப்போய் மண்ணுலகை விட்டு அவன் போனபோது எத்தனையோ அழுத உள்ளங்களில் என்னுடையதும் ஒன்று.

இன்றைக்குக்கூட ஜேசுதாஸோ, பாலமுரளி கிருஷ்ணாவோ பாடுவதைக்கேட்டால் எனக்கு 'சந்தர்' என்ற அந்த இளைஞனின் ஞாபகம் வந்து என்னை அறியாமலே என் கண்ணில் நீர் பெருகும். வாழ்க்கை என்ன என்பதை அறியாமலே இளம் வயதிலேயே வாடிவிட்ட அந்தக் குருத்து என் உள்ளத்தில் கர்நாடக சங்கீத ரசனையை தழைக்கச் செய்தது.

சுகந்தா ராமகிருஷ்ணன்

"எங்கள் வீட்டு
சமையல்
எப்போதும் சுவை
யுடனும் நல்ல
மணத்துடனும்
இருக்கக்
காரணம்"



**V.Y.D**

# தேங்காய் எண்ணெய்




உங்கள் தேவைக்கேற்றபடி
பலவித பாக்கிங்குகளில்
கிடைக்கின்றது.

V.V. தனுஷ்கோடி நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001

# சங்கீதச் சிரிப்பு!

ஆதௌ கிரிக்கெட் கீர்த்தனாரம்பத்திலே
பம்பாயிலே கவாஸ்கரும்,
கீத் ஃபெளட்சரும் அவா
அவா டீம்களோடு மோதிக்
கொண்ட புராணத்தை
அடியேன் சொல்றதிலே
குற்றத்தைத் தள்ளி...





- மாமி யார் கிட்டே என்ன அன்பு! ஒலி விழாவுக்கு அனுப்புனியாமே!
- கைமேல் பலன் கிடைச்சுது!... அவங்களுக்குக் காது அவுட்!



ஒலி விழாவுக்குப் பறக்கும் யானை மாதிரி எனக்கும் ஒண்ணு வரைஞ்சு கொடுக்கச் சொன்னது ஒம் பொண்ணு இப்படி...

சிங்கார நடை நடந்து சிற்றிடை குலுங்க வந்தாள்!... அ சிங்கார...





- ஜலதரங்கத்துக்குக் கொஞ்சம் தண்ணீர் வேண்டும்!...


சாட்டையில்லாப் பம்பரம் போல்
ஆட்டி வைக்கும் இறைவன்...
சாட்டையில்லா..






ஸ்கோர் என்ன ஸார்?


ரவி சாஸ்திரி பௌல்ஸ்..


• என்ன.. மண்டி போட்டு பாடறாரே?..
• டி.வி. ஃபிலிம் எடுக்கறாங்க.. மைக் முகத்தை மறைக்காம இருக்கத் தான் இப்படி...


ஹம் வாதாபி கண...
ஹம்.. ஹும்.. ஹா.. ஹூ..
பாகவதர் கராத்தே கத்துக்கற பயன்..

வழிந்துவரும்,
தழுவிநிற்கும்
மென்மை...
ஒளிபடைக்கும் பிலிப்ஸ்



புதிய
# அர்ஜெண்ட்டா-K

புத்தம்புதிது. கண்ணுக்கிதம்.
நிழலேயற்ற ஒளி. படைத்திடுவோர்
பிலிப்ஸ். ஆர்ஜென்ட்டா-K.
பால்வண்ணமான பல்பு.
இதற்கேது இணை !

**அளவான மின்னலகில் அதிக ஒளிவெள்ளம்**

**பிலிப்ஸ்**




HTB-PEI-6701

மணியைப் பார்த்தான்.

ஆறு முப்பத்தைந்து.

இன்னும் முதலாளி வந்தபாடில்லை.

வழக்கமாக ஆறு மணிக்கு வந்துவிடுவான்.

வந்தாலும் எட்டு மணிக்கு முன்பாக அவளை வீட்டுக்கு அனுப்ப அவனுக்கு மனசு வராது. இல்லாத வேலையெல்லாம் தானாக உற்பத்தி செய்து செய்யச் சொல்லுவான். அப்படி உற்பத்தி செய்ய முடியாவிட்டாலும்கூட இவளைக் கவனிக்காதது மாதிரி ஏதாவது 'அகௌண்ட்' புத்தகத்தை எடுத்துப் புரட்டிக் கொண்டிருந்துவிட்டு எட்டு மணி அடித்ததும் 'அடேடே நீ இன்னும் வீட்டுக்குப் போகலேயா' என்று போலித் தனமாகக் கேட்டு அனுப்புவான்.

அவளுக்கு 'டைப்' செய்வது வேலை. நாளெல்லாம் ஏதாவது டைப் செய்ய வேலை இருந்து கொண்டே இருக்கும். தங்கள் கம்பெனி வேலை என்றில்லாமல், 'ஜாப்' டைப்பிங்–மாதிரி சுற்றி உள்ள சில கடைகளுக்கும் டைப் விஷயத்தை வாங்கி வந்து அடிக்கச் சொல்லுவான். அதற்காக வரும் பணத்தில் அவளுக்குக் காலணா கூட கிடைக்காது.

மாதச் சம்பளம் நூற்றுப் பத்து ரூபாய். லீவு போட்டால் சம்பளம் 'கட்' ஆகிவிடும்.

ஞாயிற்றுக் கிழமை கூட முழுசாக லீவு கிடையாது. மத்தியானம் ஒரு மணி வரை வேலை செய்தாகணும்.

வீட்டிலிருந்து ஒரு மைல் நடந்து வந்து சைதாப்பேட்டை ஸ்டேஷனில் எலெக்ட்ரிக் ட்ரெயின் பிடித்து பீச் ஸ்டேஷனில் இறங்கி பிராட்வே வரை நடந்து போகணும்.

கரெக்டாகக் காலை ஒன்பது மணிக்கு கம்பெனியில் இல்லாவிட்டால் அன்றைக்கெல்லாம் முதலாளி பிள்ளையிடமும், முதலாளியிடமும் 'மூஞ்சி அடி' பட்டாகணும்!

அலுவலகத்தில் இந்த நிலைமை என்றால் வீட்டில் இதைவிட அவலம்.

வஞ்சனை வைக்காமல் இடைவெளி சேர்க்காமல் மூன்று பெண்களையும் மூன்று பிள்ளைகளையும் தந்தை பெற்றிருந்தார். கடைசித் தங்கைக்கு மூன்று வயது. அவளோடு முற்றுப்புள்ளி என்றும் சொல்லிவிட முடியாது.

தாய் நித்திய ரோகி. இதன் நடுவில் அவ்வப்போது கர்ப்ப ரோகம் வேறு.

தந்தைக்குச் சமையல் வேலை. ஒரு சீசனில் நிறைய வேலை இருக்கும். பல சமயங்களில் வேலை இருக்காது. அதிகமாகச் சம்பாதிக்கும் நாட்களில் குடும்பத்துக்கு அதிக பணம் வராது. அதிகமாகச் சம்பாதிக்கும் பணம் ரேஸுக்கும் சீட்டுக்கும் போய்விடும். கையில் காசு இல்லாத நாட்களில் வீட்டில் தலை காட்ட மாட்டார்.

தம்பி, தங்கைகள் தாய் தந்தையைக் கூடக் கேட்காது. இவள்தான் எல்லாத்துக்கும் தாய் மாதிரி. இரவு ஒன்பதரை ஒன்பதே முக்கால் மணிக்கு வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு மறுநாளைக்கான துணி மணிகளைத் துவைத்துவிட்டு உட்காரும்போது பத்தரை ஆகிவிடும்.

இவளும், இவளது சகோதரியுமாக ஒரு மணி நேரம் அப்பளம் இடுவார்கள். நூறு அப்பளம் இட்டால் ஒன்னரை ரூபாய் கிடைக்கும்.

அப்பளக் கடை முடிந்து படுக்கப் போகும் போது இரவு பன்னிரண்டு ஆகிவிடும்.

மறுநாள் காலை ஐந்து மணிக்கு எழுந்து பம்பரமாய்ச் சுழன்றாக வேண்டும். தாயின் உதவியை எதிர்பார்க்காமல் தானாகச் சமையல் செய்தால்தான் ஒன்பது மணிக்கு அலுவலகத்தில் இருப்பதற்குச் சரியாக இருக்கும்.

மணியைப் பார்த்தான்.

ஏழு நாற்பது.

இன்னும் முதலாளியைக் காணோம். ●





● இந்த நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவு கீர்த்தி வெளி உலகத்திலே பரவாமல் இருப்பதை நான் அறிவேன். போன நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவொளி சற்றே மங்கியிருந்ததையும் நான் அறிவேன். ஆனால் போன நிமிஷம் போய்த் தொலைந்தது. இந்த நிமிஷம் சத்தியமில்லை. நாளை வரப்போவது சத்யம். மிகவும் சீக்கிரத்திலேயே தமிழின் ஒளி உலகம் முழுவதிலும் பரவா விட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள்.

—பாரதியார்

அனைத்துப் பொருள்களையும் விட இரண்டு விஷயங்கள் பெரியவை ஒன்று காதல்; மற்றொன்று போர். -ஹோமர்

தாயே! பூமியில் நல்ல சுபாவமுள்ள பிள்ளைகள் பலர் உனக்கு இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடையில் நான் ஒருவனே மதிகெட்ட பிள்ளை. மங்கள சொரூபியே! உன்னைத் தாய் என்று போற்றாமல் விட்டுவிட்டது என்குறை. எனினும் என் மனம் போனபடி என்னை விட்டுவிடுதல் உனக்குத் தகுமோ? கெட்ட மகன் பிறக்கலாம், ஒருபோதும் கெட்ட தாய் இல்லையன்றோ? —ஆதி சங்கரர்

நம் குழந்தைகளுக்குச் சிறு வயதில் கடவுள் பக்தியைப் புகட்ட வேண்டும். கெட்ட எண்ணங்களை அகற்ற அவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். இந்நோக்கத்துடன்தான் நம் முன்னோர்கள் பாவை நோன்பை உண்டு பண்ணினார்கள். சமய நெறியைப் புகட்டி உள் பகைவனை வெல்லும் ஆற்றலை மக்களுக்கு உண்டு பண்ண வேண்டும். மனத்திலுள்ள அழுக்கை ஆண்டவன் நினைப்பைக் கொண்டே போக்க முடியும்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்.

பழமையிலிருந்துதான் எதிர் காலம் படைக்கப்படுகிறது. பழமையே எதிர்காலத்துக்கு வழி வகுக்கிறது. ஆகவே இந்துக்கள் பழமையை அதிகம் படிக்கப் படிக்க அவர்களது எதிர்காலம் ஒளிமயமாகத் திகழும். யாரொருவர் பழமையை ஒவ்வொருவர் வீட்டு வாசலிலும் கொண்டு நிறுத்துகிறாரோ அவர் தேசத்தைப் புனருத்தாரணம் செய்தவர். —சுவாமி விவேகானந்தர்

முதலாளியிடம் இருபது ரூபாய் 'அட்வான்ஸ்'கேட்டு வாங்கிப் போக வேண்டும். விடிந்தால் சமைக்க அரிசி கிடையாது. மற்ற மளிகைச் சாமான்களுக்கும் அதே நிலைதான்.

சே...இதென்ன வாழ்க்கை?

எந்தத் திசை திரும்பினாலும் வெளிச்சமே தெரியாத ஓர் எதிர்காலத்தை வைத்துக் கொண்டு, வயிற்றுப் பாட்டுக்காகத் தன் மானத்தை அடகு வைத்துவிட்டு நாளெல்லாம் அவலம் சூழ, ஆத்ம வெறுப்புடன் வாழ்வது?

இப்படியாவது வாழ்ந்துதான் தீரணுமா என்ன?

இத்தகைய சிந்தனையில் அவன் ஆழ்ந்திருக்கும்போதே முதலாளி வந்தான்.

மணி ஏழு ஐம்பது.

கெஞ்சிக் கூத்தாடி அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு எட்டு மணிக்குக் கிளம்பினால் கூட, அரிசி, சாமான் வாங்கி ஒன்பதே கால் மணிக்கு வீட்டுக்குப் போய்விட முடியும் என்று அவன் உள் மனம் கணக்கிட்டது.

''தோ பார்... .ரொம்ப முக்கியமான விஷயங்கள் இது. இந்த ரெண்டு ஸ்டேட்மெண்டையும் 'டைப்' செஞ்சு கொடுத்துட்டு நீ வீட்டுக்குப் போ.. ரொம்ப அர்ஜெண்ட்... காலேலே ஸ்டேட்மெண்டை அனுப்பியாகணும்...'' என்று கூறி இரண்டு பெரிய ஸ்டேட்மெண்டுகளைக் கொடுத்து விட்டு அவனுடைய பதிலை எதிர்பார்க்காமல் முதலாளி போனான்.

ஆங்காரமும், அழுகையும் அடிவயிற்றிலிருந்து பிய்த்துக் கொண்டு வெளிக்கிளம்பியது அவனுள். கஷ்டப்பட்டு அவற்றைத் தொண்டைக் குழிக்குள் அடக்கிக்கொண்டு 'டைப்' செய்யலானான்.

ஒரு வழியாக இரண்டு ஸ்டேட்மெண்டையும் அவன் அடித்து முடித்தபோது இரவு மணி எட்டு ஐம்பது.

''பாவம், உனக்கு நேரமாகிறது. நீ வீட்டுக்குக் கிளம்பு'' என்றான் கடைசியாக. அதுவும் ஏதோ அவனுக்குச் சலுகை அளிப்பது போன்ற த்வனியில்!

''ஒரு இருபது ரூபா அட்வான்ஸ் வேண்டும்....'' தயங்கி இழுத்தபடி கேட்டான்.

''ஏற்கனவே ஏதோ வாங்கியிருக்கே போலிருக்கே!'' கேட்டான்.

''ஆமாம். .பத்து ரூபா. போன வாரம் கொடுத்தீங்க...'' என்றான்.

''இது மாதிரி வாங்கிட்டா சம்பளத்தன்னிக்கு ஒண்ணுமில்லாமப் போயிடுமே...''

''இன்னிக்குக் கொடுங்க போதும். இனிமே கேட்கலே.''

''நாளைக்கு வாங்கிக்கோ... இன்னிக்கு இல்லே.'' முதலாளி கிளம்பிப் போனான்.

இயலாமையும், வேதனையும், ஆற்றாமையும் மறுபடியும் அவனுள் குதித்துக் கும்மாளமிட, ஏற்கனவே துளிர்விட்டிருந்த விரக்தி தீ போல் அவனுடைய உள்ளத்தை வியாபித்தது.

''சீ இப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்வதை விடச் சாகலாம். யாரை நம்பியும் இந்த உலகத்தில் யாரும் இல்லை. நாம் போய் விட்டால் ஏதோ வழி பிறந்து குடும்பம் தானே ஓடும்....

'எலெக்ட்ரிக் ட்ரெயின் வரும்போது ரயில்வே டிராக்கில் பாய்ந்துவிட வேண்டியது தான். சைதாப்பேட்டை கேட் அருகிலேயே டிராக் ஓடுவதால் ஆக்ஸிடெண்ட் மாதிரி ஆகிவிடும்' என்கிற உடனடி முடிவுக்கு வந்தாள். மனசு அம்முடிவைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டது.

இம்முடிவால் மனதின் பளு இறங்கிப் போக அவசரமில்லாமல் நிதானமாக அலுவலகத்தை விட்டுக் கிளம்பினாள்.

மாடியிலிருந்து கீழிறங்கித் தெருவுக்கு வந்தபோது அவன் வாசலில் ஓரமாக ஒதுங்கி நின்றிருந்தான்.

மல்லிகைச் செண்டால் வருடியதுபோன்ற தோர் இதம் உள்ளத்தின் ஏதோவொரு கோடியில் பிறந்ததை அனிச்சையாய் உணர்ந்தாள்.

அவளைப் பார்த்துத் தனக்கே உரித்தான சற்றுச் சாய்வான புன்சிரிப்பை உதிர்த்தான்.

## வயலின் செம்மை

கச்சேரியின்போது முந்திரிப் பருப்பையும், குருமிளகையும் சரிசமமாகக் கலந்து வைத்துக்கொண்டு அவ்வப்போது எடுத்து வாயில் போட்டு மென்று கொண்டும், பக்கவாத்தியக்காரர்களுடன் வேடிக்கை செய்து கொண்டும் உற்சாகமும் மகிழ்ச்சியும் பொங்க கம்பீரமாகவும் உருக்கமாகவும் பாடியவர் செம்மை வைத்தியநாத பாகவதர். குருவாயூர் கிருஷ்ண பகவானின் அருளாசியினால் இழந்த குரலை மீண்டும் பெற்றுக் கடைசிவரை பக்தியோடு அற்புதமாகப் பாடிவந்த மகான். அத்துணை பெரிய வித்வான் - எங்களுக்கு (நானும் என் தங்கை சுகந்தாவும் சேர்ந்து பாட்டுக் கச்சேரி செய்தபோது) மேடையில் பிடில் வாசித்தார் என்றால் நாங்கள் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்?

'எந்தரோ மகானுபாவுலு' என்னும் பாடலுக்கு சரணம் பாடும்போது பலே பலே என்று சொல்லிக் கொண்டு பிடில் வித்வானை விலகச் சொல்லி அவர் கையிலிருந்து பிடிலைத் தாம் வாங்கிக் கொண்டு மிக நன்றாக வாசித்துக் கூட்டத்தையே மெய்சிலிர்க்க வைத்துவிட்டார். மேலும் ஒரு மணி நேரம் நாங்கள் பாடிய கச்சேரி முழுமைக்கும் அவரே பிடில் வாசித்தார்.

முடிந்தவுடன் தம் மனைவியிடம் ஒரு தேங்காய் எடுத்து வரச் சொல்லி எங்கள் இருவருக்கும் திருஷ்டி சுற்றச் சொல்லிப் பிறகு தேங்காயை வாங்கித் தானே தம் கையால் உடைத்தார். இது நடந்தது 21 ஆண்டுகளுக்கு முன்பு. செம்மை பார்த்தசாரதி கோவில் விழாவின்போது.

லீலா ராமச்சந்திரன்





''நீங்க எப்படி இங்க வந்தீங்க... அதுவும் இந்த நேரத்துல...''

''உனக்குன்னுதான் காத்திருக்கேன்...''

''எப்போதிருந்து?''

''எட்டரை மணியிலிருந்து....''

''அடப் பாவமே.. நான் மேலே இருக்கேன்னு எப்படித் தெரியும்? வீட்டுக்குப் போயிருந்தேன்னு.... மயிலாப்பூர்லே உங்களுக்குவேலை..அதுவும் ஒன்பது மணிவரைலே இருக்குமே!''

''ஒரு கலெக்ஷனுக்குன்னு சௌக்கார் பேட்டைக்கு அனுப்பினாங்க. வேலையை முடிச்சுட்டு வீட்டுக்குப் போயிடச் சொன்னாங்க. எட்டு மணி வாக்கிலே வேலை முடிஞ்சிடுச்சு. உன்னைப் பார்க்காம வீட்டுக்குப் போக மனசில்லே... நீ எட்டு மணிக்கு வீட்டுக்குக் கிளம்பிடுவேன்னு பயம் வேறே.. நல்ல காலம் இருந்தே....''

''என்னவோங்க...இன்னிக்கு மனசே சரியில்லே. எதுக்கு வாழணும். பேசாம ரயில்வே டிராக்குலே விழுந்து செத்துடலாம்னு கூட நெனைச்சேன்....''

''ஐயையோ... என்ன இது இப்படியெல்லாம் பேசறே...''

''வாழ்ந்து என்னங்க சாதிக்கப் போறேன்? நான் எதுக்கு வாழறது சொல்லுங்க...''

''நான் இருக்கேனே என்னை மறந்துட்டயா... எனக்குன்னு நீ வாழக்கூடாதா... கொஞ்சம் பொறுத்துக்கோ. கொஞ்சம் சிக்கல் இருக்கு... சரி செஞ்சுட்டு ஒரு வருஷத்துலே நான் உன்னை கல்யாணம் செஞ்சுக்குவேன். என்ன பேசாம இருக்கே...''

'எனக்குன்னு நீ வாழக் கூடாதா?' அவன் கேட்ட கேள்வி அவளுடைய உள்ளத்தில் புஷ்பார்ச்சனை செய்தபடி இருந்தது.

முதலாளி நேரமாக்கினதாலேதான் இவனைச் சந்திக்க முடிந்தது என்கிற எண்ணம் பிறந்து முதலாளியை மனசு வாழ்த்தியது.

''அப்ப நாம்ப கௌம்பலாமா?''என்றான்.

''இது மாதிரி சந்திச்சுப்பேசறதுக்கு நமக்கு எப்பவோ நேரம் கெடைக்குது. பீச் ஸ்டேஷன் போகாமெ நேரே கோட்டை ஸ்டேஷனுக்கு நடந்து போனா பேச இன்னும் கொஞ்சம் நேரம் கெடைக்கும்... உனக்கு நேரமாயிடுச்சுன்னா வேணாம்...'' என்றான்.

''அப்படி ஒண்ணும் நேரமாயிடலே. ஒன்பதேகால்தான் ஆறது. துணைக்குத்தான் நீங்க இருக்கீங்களே... கோட்டை ஸ்டேஷனுக்கே போகலாம்'' என்றாள்.

ஆளுக்கொன்றாக இரண்டு வேர்க்கடலைப் பொட்டலங்கள் வாங்கி ஒன்றை அவளிடம் கொடுத்தான்.

அன்று மாலையிலிருந்து அலுவலகத்தில் தான் அனுபவித்த மனக் குமுறல்களைக் காற்றில் பறக்க விட்டு, மறுநாள் காலைக்கான அரிசிப் பிரச்னையை உள்ளத்தின் ஒரு மூலையில் புதைத்து விட்டு, என்றோ அவனோடு நிகழ்த்தப்போகும் — நிகழ்த்தப் போவதாக அவன் சொல்லி அவள் நம்பும்— மண வாழ்க்கையை மனத்துள் பரவ விட்டுக் கொண்டு, அவனுடன் சந்தோஷித்துப் பேசியபடி கோட்டை ஸ்டேஷனைநோக்கி நடக்கலானாள்.

### கல்லில் மலர்ந்த காவியம்: 7

# திரிபுவனம்

கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது திரிபுவனம்! கம்பஹரேச்வரர் கோயில் ஓர் அருமையான ஆலயம். சரபமூர்த்தி இங்கு சிறப்பான தெய்வம். தஞ்சைப் பெருவுடையார் கோயில் பாணியை உடையது. மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி1178—1216) எடுப்பித்தது.

இங்குள்ள சிற்பங்களும் வனப்பு மிக்கவை. முதலிலும் கடைசியிலும் கொடிப் பெண்கள் ஒய்யாரமாக நிற்கின்றார்கள். பின்புறம் சாமரம் தாங்கிப் பெண் நிற்கிறாள். நடுவே ரிஷபாந்திக மூர்த்தி காம்பீர்யமாகக் காட்சி தருகிறார். அவரின் வலக் கையில் இருப்பதுதான் செண்டு (Whip) எனப்படும். ''செண்டுசேர் விடையினான்" என இத்திரு மேனியைத் தேவாரம் உணர்த்தும்.

நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்து விட்டுச் சென்றுள்ளது இந்த கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச்சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின் பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். ''செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!



**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

ADWAVE LM 1753

சில்பி

# ஷிபா



அன்பிற்கினியவன்

## 3

**வி**வேக்!

முகேஷின் முகம் மலர்ந்தது. யாரைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தானே அவனே இதோ!

''விவேக்! வெளியூருக்குப் போயிருந்தாயா என்ன? ரொம்ப நாட்களாக உன்னைப் பார்க்கவே முடியவில்லையே!''

''சோறு கண்ட இடம் சொர்க்கம். எனக்கென்ன வேலையா, வெட்டியா? விடிந்ததும் எங்காவது சுற்றணும். பொழுதைப் போக்கணும்! தூங்கணும்! இதுதானே என் தினசரி புரோக்ராம்!''

''அப்படியானால் எனக்கு ஒரு உதவி பண்ணு!''

''தெரியுமே! என்னைப் பற்றி நீ அக்கறையாகக் கேட்க ஆரம்பித்தபோதே என் மூலமாக நீ ஏதோ காரியம் சாதிக்கப் போகிறாய் என்று என்னால் யூகிக்க முடியாதா என்ன? சொல்... செய்கிறேன்!'' சலித்துக் கொண்டான் விவேக்.

''நீ என்னுடன் சென்னை வருகிறாய்!'' என்றவாறே தன் திட்டத்தை அவனிடம் விவரித்தான் முகேஷ்.

**செ**ன்னையில் மாம்பலமும் சைதாப்பேட்டையும் சந்திக்கும் இடத்துக்கு வெகு அருகே ஒரு பர்னிச்சர் கம்பெனி இருக்கிறது. அந்தப் பகுதியில் யாரைக் கேட்டாலும் அது 'பிரபு பர்னிச்சர் கம்பெனி' என்று சொல்லி விடுவார்கள். மரத்தினால் ஆன எல்லாப் பொருட்களும் அங்கு தயாரித்து விற்பார்கள்.

அதனுடைய நிர்வாகி பிரபு. அவனுக்கென அங்கே தனி அறை. அதில் சில வசதிகள். அறையிலிருந்தவாறே வெளியே வொர்க்ஷாப்பில் மர வேலைகள் நடந்து கொண்டிருப்பதைக் கண்காணிக்க முடியும். அதற்காகவே திட்டமிட்டு அந்த அறையைத் தன் அலுவலகமாக அமைத்திருந்தான் பிரபு.

அங்கு சுமார் இருபது பேர் மரக் கட்டைகளைக் குறிப்பிட்ட உருவங்களாக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். தரையில் எங்கு நோக்கினும் மரத் தூள்கள். மற்றும் ஆங்காங்கே ஜேக் பிளேனர்கள், உளிகள், பிடிச்சுராவிகள், தமர் ஊசிகள், எமரித் தாள்கள், மரப் பலகைகள் துண்டாக்கும் சர்குலர் சா மிஷின்கள், வார்னீஷ் வாசனை..

''ஏனப்பா! நான்கு பீரோ வேண்டும். தயாராக இருக்கிறதா?'' என்ற ஒரு குரல் கேட்டுத் தலைநிமிர்ந்தான் அங்கு நின்று கொண்டிருந்த ஒரு தொழிலாளி. அங்கு வேலை செய்யும் மற்றவர்களுக்குத் தலைமையாள் போன்ற தோற்றம்.

டிரிம்மாக உடை அணிந்து சுத்தமாய்த் தோற்றமளித்த ஒருவன் எதிரே நின்றிருந்தான்.

''இங்கே எதுவும் தயாராக வைத்துக் கொள்வதில்லை சார். தேவைக்கு ஆர்டர் கொடுப்பார்கள். அதற்குத் தகுந்தபடி செய்து கொடுத்து விடுவோம். எங்கள் முதலாளியைத்தான் நீங்கள் கண்டு பேசிக் கொள்ள வேண்டும். அவர் சொல்கிற டிசைனுக்குத் தக்கபடி 'மேனுபாக்சரிங்' செய்வது மட்டுமே எங்கள் வேலை!''

''அப்படியா?''

''ஆமாம். அதோ தெரிகிறதே...'' கட்டிடத்தில் பிரபுவின் அறையைக் காட்டினான் அந்தத் தொழிலாளி. ''முதலாளி இப்போது வெளியே போயிருக்கிறார். சற்றுப் பொறுத்து நீங்கள் வந்தால் அவரைப் பார்க்கலாம்.''

''பரவாயில்லையப்பா... நீதான் போதிய விவரம் சொல்லிவிட்டாயே... வந்து... ஒரு சின்ன விஷயம். ஒரு ஐந்து நிமிடம் அந்த டீக்கடைவரைக்கும் உன்னால் வரமுடியுமா?'' இளிக்கத்தான்.

''ஐயையோ. அதெல்லாம் முடியாதுங்க. முதலாளிக்குத்தெரிந்தால் ரொம்பக் கோபிப்பார். உங்களுக்கு நான்கு பீரோதானே வேணும்?''

''ஐந்து நிமிடம்தானே வாயேன்...''

என்ன நினைத்தானோ தெரியாது. டீக்கடைக்குக் கிளம்பி விட்டான்.

''இந்தா பாரப்பா! உன் பெயர் என்ன?''

''குருசாமி.''

''குருசாமி! நான் முகேஷ். உன்னால் ஒரு காரியம் ஆகணும்.''

''நான்கு பீரோதானுங்களே?''

தன் பைக்குள் கையை அவசரமாக நுழைத்தான் முகேஷ். மடிக்கப்பட்ட ஐம்பது ரூபாய்த் தாள் ஒன்றை உள்ளங்கையில் வைத்து ரகசியமாய்க் குருசாமி மட்டும் பார்க்கும்படி காட்டினான். ''இது பீரோ விஷயமில்லை.''

''முடிந்ததை நிச்சயமாய்ச் செய்யறேனுங்க'' என்று பல்லைக் காட்டினான் குருசாமி. முகேஷ் சிரித்துக் கொண்டான் தனக்குள். ஐம்பது ரூபாய் எவ்வளவு சீக்கிரமாய் வேலை செய்கிறது!

''எனக்குத் தெரிந்தவன் ஒருவன். வேலையில்லாத வெட்டிப் பயல். விவேக் என்று பெயர். அவனுக்கும் இந்த மர வேலைகள் தெரியும். ஐ.டி.ஐ.யில் கார்பெண்டரி டிரேடு படித்துத் தேறியவன். அவனை இங்கே வேலையில் சேர்க்க நீதான் ஏற்பாடு செய்ய வேண்டும். இதை வைத்துக்கொள்.'' — ஐம்பது ரூபாயைக் குருசாமியின் கையில் திணித்தான் முகேஷ்.

''ஹி....ஹி...முதலாளியிடம் சொல்லிச் சேர்த்து விடுவதற்கு இனி நானாச்சுங்க!''

''அவன் எனக்கு ரொம்ப வேண்டியவன்!''

மடக்கடைக்குள் இருந்தவாறு இவர்களையே கவனித்துக் கொண்டிருந்த விவேக், முகேஷின் சைகையைக் கவனித்து இவர்களை நெருங்கினான். ''இதோ இவன்தான்!''

''சேர்த்து விடுறேனுங்க... அதற்கு நான் பொறுப்பு...'' குழைந்தான்.

''குட் குருசாமி....அப்படியானால் விவேக்! நான் கிளம்பட்டுமா?''

மலர்ச்சியுடன் தலையாட்டினான் விவேக்.

**பி**ரபுவின் வீட்டைக் கண்டுபிடிக்க அதிக நேரமாகவில்லை முகேஷுக்கு.

''நான் முகேஷ். மதுரையிலிருந்து வருகிறேன். பீதாம்பரம் உங்களைப் பார்த்து நலம் விசாரித்து விட்டு வரச் சொன்னார்...'' என்றவாறு ஒரு கவரை, கதவைத் திறந்து வெளிப்பட்டவனிடம் நீட்டினான். ''நீங்கள் தானே பிரபு?''

தலையசைத்தவாறே அதை வாங்கி உள்ளே இருந்த கடிதத்தைப் பார்த்தான் பிரபு. அக்கணம் முகேஷ் அவனை அளவிட்டான். நல்ல திடகாத்திரமாகவும், சிகப்பாகவும் இருந்தான். இளைஞன். மெலிதான மீசை. நீண்ட கிருதா. வளைந்து சுருண்ட வந்தியத் தேவன் முடி. பார்த்தவுடன் பிறர் மனத்தில் தன்னைப்பற்றி நல்ல விதத்தில் அழுத்தமாய்ப் பதிந்து கொள்ளும் தோற்றம்.

''உள்ளே வாருங்கள்!'' தன் அறைக்குக் கூட்டிச் சென்றான் பிரபு. முகேஷ் சோபாவில் சாய்ந்தவாறு அந்த அறையை நோட்டம் விட்டான். சில காலண்டர்கள். பிரபுவின் சில இளமைப் போட்டோக்கள். பிரபுவும் அவன் மனைவியும் உள்ள திருமணப் போட்டோ.

''ஒரு வேலை விஷயமாகப் புறப்பட்டேன். அப்போதுதான் உங்களைப் பற்றியும் மீனாவைப் பற்றியும் சொன்னார்.''

''மீனா!'' உள்ளே திரும்பிக் குரல் கொடுத்தான் பிரபு.

''இதோ வந்துவிட்டேன்'' என்று சொல்லிவிட்டு, சில கணங்களிலேயே ஆவி பறக்கும் காப்பியுடன் அறைக்குள் வந்தாள் ஒரு பெண்.

''மீனா! இவர் முகேஷ். உன் அப்பாவின் நண்பராம். வேலை விஷயமாக வந்துள்ள இவர் நம் வீட்டில் இன்று ஒரு நாள் தங்குவார். உன் அப்பாதான் இவரை இங்கு அனுப்பியிருக்கிறார்'' என்றான் பிரபு.

முகேஷ் திடுக்கிட்டான். எவ்வளவு களையாகவும், சிரிப்பு தவழும் உதடுகளோடும், உடல் செழிப்போடும் திருமணப் போட்டோவில் காணப்படுகிறாள்! அந்த மீனாவா இவள்? ஏனிப்படி கண்களில் ஒளி குன்றித் தேகம் மெலிந்து கவலை இழையோடிருப்பது போல் தோற்றமளிக்கிறாள்? ஏன்?... ஏன்?

புதியவனைக் கையால் தயக்கத்துடன், ''உங்களுக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறதே'' என்றான் மெதுவாக.

''ஒன்றுமில்லையே! நன்றாகத்தான் இருக்கிறேன்!'' என்று சிரித்தாள் மீனா.

பிரபு குறுக்கிட்டான். ''போன வாரம் அவளது தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ரூபா காணாமல் போய்விட்டாளாம். அதைப் படித்தது முதல் எனக்கும் திகைப்பும் வருத்தமும்தான். ஆனால் இவளோ சரியாகச் சாப்பிடுவதும் இல்லை, யாருடனும் சரளமாகப் பேசுவதும் இல்லை...''

''இருக்கத்தானே செய்யும்!'' என்றான் முகேஷ். ''என்ன இருந்தாலும் உடன் பிறந்த பாசம் போகுமா?''

காலி டபராவை வட்ட மேஜையில் வைத்தான் பிரபு.

''ரூபா காணாமல் போனது பற்றி என்னிடமும் புலம்பிக் கொண்டிருந்தார் பீதாம்பரம். ஆமாம் – மதுரையிலிருந்து கிளம்பி



அவள் இங்கேயா வந்தாள்?'' என்று கேட்டான் முகேஷ்.

''ஆமாம். அவளுக்கு அக்கா என்றால் உயிர்... இக்காலப் பெண் ஆயிற்றே. என்னுடன் சரிக்குச் சரி வாயாடுவாள்'' என்றான் பிரபு.

''இங்கு எத்தனை நாட்கள் தங்கினாள்?''

''நவம்பர் 2ல் வந்தாள். 27ல் பெங்களூர் கிளம்பி விட்டாள்.''

''ஓகோ!''

''ஆமாம். நான்தானே ரயிலில் முதல் வகுப்பு டிக்கெட் ரிசர்வ் செய்துவிட்டு வந்தேன்!''

''சரிதான்! ரூபா ஒரு மாதம்போல் உங்கள் வீட்டில் தங்கியிருந்தாளே —எங்கேயும் வீக் எண்ட் டூர், பிக்னிக் என்று போகவில்லையா?''

''ஏன் போகாமல்? பல இடங்களுக்கும் போனோம். மகாபலிபுரம், வேடந்தாங்கல், சமயபுரம் இன்னும்....'' யோசனையில் நெற்றியில் விரல் வைத்தான் பிரபு.

''போதும்... போதும்'' என்று தலையை ஆட்டினான் முகேஷ்.

''நான்கூடச் சொன்னேன் 'லீவை எக்ஸ்டண்ட் பண்ணு ரூபா' என்று. பிடிவாதமாக மறுத்துவிட்டாள். இதில் மீனுவுக்கும் எனக்கும் அவளிடம் வருத்தம் கூட. பாவி! பெங்களூர் போனவள் எங்கேதான் போய்த் தொலைந்தாளோ? இங்கேயே இருந்திருக்கலாம்....'' சோகத்தால் தன் மார்பில் மெதுவாகத் தட்டிக் கொண்டான் பிரபு.

''ரூபாவுக்கு ஆண் நண்பர்கள் யாரும் உண்டா? உங்களிடம் அது பற்றி எதுவும் ரூபா சொல்லி யிருக்காளா?'' என்று மீனுவிடம் கேட்டான் முகேஷ்.

''அப்படி யாரைப் பற்றியும் அவள் என்னிடம் சொல்லவில்லை'' என்றாள் மீனு.

பிரபு பெருமையாகச் சொன்னான்: ''அவள் சுபாவத்தில் யாருடனும் கலகலப்பாகப் பேசுவாளே தவிர, ஆண்களைத் தன்னிடம் அண்ட விடமாட்டாள் சார்! எவனும் அவளிடம் வாலாட்ட நினைக்கவும் முடியாது. ரொம்பக் கண்டிப்புக்காரி.''

''என்னவோ ரூபாவின் தலையெழுத்து. பிரபு சார்! பீதாம்பரம்தான் எனக்குப் பழக்கமே தவிர, அவரது குடும்பத்தினர் யாரைப் பற்றியும் எனக்கு அவ்வளவாகத் தெரியாது. அதனால்தான் இவைகளையெல்லாம் கேட்டேன்'' என்றான் முகேஷ்.

மீனுவுடனும் பிரபுவுடனும் அன்று முழுவதும் பேசியதில் இதே விஷயங்கள்தான் திரும்பத் திரும்ப அவர்களிடமிருந்து வந்தனவே தவிர, புதிய செய்திகள் கிடைத்தபாடில்லை.

அன்று இரவு.

சுவர்க் கடிகாரம் மணி எட்டு அடித்து ஓய்ந்தது. முகேஷ் தனக்குக் கொடுக்கப்பட்டிருந்த அறையில் ரூபாவைப் பற்றிய குழப்பமான மனத்தோடு அன்றைய மாலைப் பத்திரிகைகளைச்சாவதானமாகப்புரட்டிக்கொண்டிருந்தான். அவைகளை அவன் இருந்த மனநிலையில் படித்தானா என்பது சந்தேகமே!

அச்சமயம்—

பங்களாவே அதிரும்படி 'ஓ' என்ற அலறல் அவனது செவியைத் தாக்கியது. நிச்சயமாக ஒரு பெண்தான்.

திடுக்கிட்டவனாய்ப் பத்திரிகையை அப்படியே போட்டுவிட்டு ஓடினான் வெளியே.

(தொடரும்)

## சங்கீத தேவதை கல்யாணி!

எனக்கு மற்ற ராகங்கள் எல்லாவற்றையும்விட மிகப் பிடித்த ராகம் கல்யாணி என்று கூறினால் போதாது; கர்நாடக இசையில் கல்யாணி நான் ஆராதிக்கும் தேவதை என்றே சொல்லலாம். சுமார் பத்து வருடங்களுக்கு முன் கர்நாடக இசையில் எனக்கு ஈடுபாடு இல்லாதபோது - திரைப் பாடல்கள் இரண்டு என்னைப் பெரிதும் கவர்ந்தன:





டி.எம். எஸ். பாடிய 'சிந்தனை செய் மனமே' மற்றும் பி. சுசீலா பாடிய 'மன்னவன் வந்தானடி' முன்னதில் பக்தி, அமைதி இருந்தது; பின்னதில் ஆனந்தம், சிருங்காரம், கம்பீரம் - இவை மேலோங்கி இருந்தன. இப்படிப் பல பாவங்களை நிதர்சிக்கக் கூடிய ராகம் கல்யாணி. இசைப் பைத்தியம் என்னைப் பிடித்துக் கொண்ட பின் (இதை என் அதிர்ஷ்டம் என்றே கூற வேண்டும்) கல்யாணியின் பல ரூபங்களை நான் தரிசித்தேன்.

கர்நாடக இசையின் விசுவரூபத்தைப் பார்த்தேன்' சந்தானத்தின் கல்யாணியில்.

''மேல் பஞ்சமத்தை எட்டிப் பிடிக்கும் பயிற்சி ஆரம்பிக்கப் போகிறது. நாமும் கொஞ்சம் வம்பளக்கலாம்'' என்ற பரவலான எண்ணத்தை அன்று அவர் சுக்கு நூறாக்கி விட்டார். மேல் காந்தாரத்தைப் பிடித்தபோதும் சரி, அதற்கும் மேலே போய் பஞ்சமத்தைத் தொட்டு அணைத்த போதும் சரி; கல்யாணிதான் தெரிந்தாள் - முயற்சியே தெரியவில்லை. எல்லாம் புதிய, அதுவரை நான் கேட்டிராத சௌந்தர்யமான கற்பனைகள். சஞ்சாரத்துக்குப் பிறகு சந்தானம் கீழே வந்து விட்டார். நான் தரையைத் தொடுவதற்கு ரொம்ப நேரம் பிடித்தது.

அதென்னவோ நான் கேட்ட எந்தப் பாடகரும் கல்யாணி என்று வரும்போது அபஸ்வரம் பாட மாட்டார்கள்; தவறான பிரயோகங்கள் செய்ய மாட்டார்கள். அந்த ராகத்துக்கு அப்படியொரு மகிமை. அப்படிப்பட்ட பரந்த உள்ளம். இது எப்படிச் சாத்தியம் என்பதற்கு சங்கீத ஆராய்ச்சி நூல்களில் விளக்கங்கள் இருக்கலாம்; என்னுடைய விளக்கம் கல்யாணி வெறும் ராகம் மட்டுமல்ல, சங்கீத தேவதையேதான் என்பது. -வி.எஸ். குமார்

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. C. 4. TM

# கலைகளும் அறிவியலும்

ரசிகமணி ரசித்த மணிகள்

மீ. ப. சோமு

டி.கே.சி.க்கு எல்லாக் கலைகளிலும் ஆழ்ந்த உணர்வும், ஒரு தனியான ரச ஞானமும் உண்டு. சித்திரங்கள், சிற்பங்கள், அருமையான தமிழ்க் கீர்த்தனைகள், பரத நாட்டியத்தின் அடைவுகள், அபிநய உல்லாசங்கள், வருத்தங்கள் ஆகிய எல்லாவற்றையும் உணர்வோடு அநுபவிப்பார். பிறருக்கும் இந்தக் கலைகளின் நுட்பங்களை ஆனந்த உணர்ச்சியோடு விளக்கிச் சொல்வார்.

இதயத்தைத் தொடும்படியாக எந்தக் கலை யாரிடம் அமைந்திருந்தாலும் அதை மனம் விட்டுப் பாராட்டுவார். அது கவியாக இருந்தாலும் சரி, சித்திரமோ சிற்பமோ, இசையோ, நாட்டியமோ, எதுவாக இருந்தாலும் சரி, அதில் உண்மையும், உணர்ச்சியும் இருந்தால், வாயார, மனமாரப் பாராட்டி, எங்கு போனாலும் யாரிடம் பேசினாலும் இவற்றை மெச்சி மெச்சிக் களிப்போடு பேசுவார்! அவருடைய பாராட்டினால் வேறிய கலைஞர்கள் பலர் அவர் எடுத்துச் சொன்ன பிறகு தமிழுலகத்துக்கு அறிமுகமான பண்டைச் சிற்பங்களும் ஓவியங்களும் பலப் பல!

கலைகளின் அடிப்படையை அவர் மிகவும் நுட்பமாக விளக்கியுள்ள ஒரு பகுதியைப் பாருங்கள்:

''உண்மை எப்போதுமே பிரயோஜனந் தான். உண்மையல்லாதது பிரயோஜனமே இல்லை. ஒருவருடைய இதயத்தில் உண்டாகிற உண்மையைக் காண்பதில் நமக்கு — மனிதர்களுக்கு — ஓர் அபார ஆசை. அதைத் தெரிந்த மாத்திரத்திலேயே இன்பம் உண்டாகிறது. கவி, சித்திரம், இசை முதலிய கலைகளில் நாம் காண்பது என்ன? கலைஞனது மனத்தில் நிகழும் உண்மையான உணர்ச்சியை வெளியிடக் கலைஞன் ஆத்திரம் கொள்கிறான், பாடுபடுகிறான். சிலவேளை வெற்றியும் பெற்று விடுகிறான். அவன் உணர்ந்த உணர்ச்சி, வெளியிடக் கொண்ட ஆத்திரம் பாடுபட்ட சிரமம், அடைந்த வெற்றி இவைகளை நாமும் ஒரு கவியிலோ, சித்திரத்திலோ, இசையிலோ உணர்ந்து விடுகிறோம். இந்த உணர்ச்சி ஒரு உருவமே பெற்று விடுகிறது. இது ஒன்றுதான் கலைஞனுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம்!''

கலைகளின் அடிப்படையான படைப்பு நுட்பத்தையும் அவை தருகிற அனுபவங்களையும் ஆழமான முறையிலே மேற்கண்டவாறு விளக்குகிறார் ரசிகமணி.

கலைகளைப் போலவே விஞ்ஞான இயலையும் மனக் களிப்போடு ஆராய்ந்து, இன்ப உணர்ச்சியோடு எடுத்து விளக்குவார் டி.கே.சி.

1948ல் ஒரு நீண்ட வால் வெள்ளி தோன்றியது அல்லவா? அப்போது ரசிகமணி எழுதுகிறார்:

''வால் வெள்ளிகள் எத்தனையோ இருக்கின்றன. ஆயிரக் கணக்காகவே இருக்கலாம். ஆனால் நமக்குப் புலனாவது சில வெள்ளிகளே.

1910ம் வருஷம் 'ஹாலீஸ் காமெட்' என்ற வால் வெள்ளியைப் பார்த்தோம்.

. சூரியனைச் சுற்றி எத்தனையோ பிரும்மாண்டமான வஸ்துக்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன.

பூமியும் சூரியனைச் சுற்றிப் பிரதட்சணம் வருகிறது. ஒரு வருடத்தில் ஒரு பிரதட்சணம். சனிக்கு 30 வருஷம் ஆகிறது. ஹாலீஸ் காமெட் என்ற வால் வெள்ளிக்கு 75 வருஷம் ஆகிறது. இப்போது தெரிகிற வெள்ளிக்கும் 75 அல்லது அதற்கு மேற்பட்ட வருஷங்கள் ஆகலாம். ஏன், 200 வருஷம் ஆகிறது என்று இருந்தாலும் இருக்கலாம்.

சூரியனுக்கும் பூமிக்கும் தூரம் 9 கோடி மைல். அப்படிப் பார்க்கும்போது பூமியின் பிராகாரம் 54 கோடி மைல்.

ஒரு வருஷத்தில் சுற்றி வருகிற பிராகாரம் 54-கோடி மைல் என்றால், 75 அல்லது 200



✖ தஞ்சாவூர் கோயிலில் உள்ள ஆடவல்லான் செம்புத் திருமேனி

வருஷத்தில் சுற்றிவருகிற பிராகாரம் எத்தனையோ 54 கோடி மைல்கள் இருக்குமே!

இந்த விதமாகப் பிரம்மாண்டமான அண்டங்கள், எட்டாத தூரம் தூரத்தப்பட்டு, மறுபடியும் சூரியனிடம் வருகின்றன. எல்லாம் கணக்குப்படிதான்! நியதிக்கும் கணக்குக்கும் விரோதமாக அண்டத்திலும் நடப்பதில்லை. அணுவுக்குள்ளும் நடப்பதில்லை. அப்படி நடப்பதெல்லாம் நம்முடைய அன்னைத்தைகளின் மூளைக்குள் தான்! அந்த மூளைக்குள் எப்படித்தான் அந்தப் பிரமன் நியதிக்கு மாறான அசட்டுத்தனத்தைத் திணித்தானே தெரியவில்லை! தமிழில் ஒன்றும் இல்லை என்று சொல்லும்படி ஓர் அற்புதத்தை அல்லவா திணித்துவிட்டான் பிரமன்! அவன் காரியம் எப்படியோ போகட்டும்!

எத்தனையோ அண்டங்கள், பிரம்மாண்டங்கள் எட்டாத வெட்ட வெளியில் ஒரு நியதியின்படி மனோ வேகத்தைத் தாண்டியதாய்ச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கின்றன!

இது தானே இறைவனது உருவம் (நியதி), நடனம்! வால் வெள்ளியைக் கொண்டு ஒரு சிறு பாகத்தை நாம் தரிசிக்கும்படி அருள் செய்கிறார் இறைவன்! முழு உருவத்தை நமக்குக் காட்டவா செய்வார்? ஞானி களுக்குக் காட்டுவார்.

அண்டர் அண்டம்
யாவும், நீ
கொண்டு நின்ற
கோலமே!
தொண்டர் கண்டு
சொரிகண் ணீர்
கண்ட நெஞ்சு
கரையு மே

(தாயுமானவர்)

''ஞானிகள் அறிந்து அனுபவித்து ஆனந்தக் கண்ணீர் விடுவார்களே, அதுதான் உன் அழகிய கோலம்!'' என்கிறார் தாயுமானவர்.

வால் வெள்ளிகளும், அவைகளை விடக் கோடானுகோடி மடங்கு பெரிய நட்சத்திரங்களும் அவைகளின் அற்புதமான இயக்கங்களும் எல்லாம் சேர்ந்ததுதான் இறைவனது அழகிய உருவம்!

நடராஜப் பெருமானது உருவத்தை, கோலத்தை, அப்படியல்லவா பார்க்கிறார்கள் தமிழர்கள், நம்மவர்கள்! இது அறியாமை இல்லை. மூட பக்தி இல்லை. இருட்டடிப்பு இல்லை. எல்லாம் காட்சி. ஒன்றாகக் காணும் காட்சி!''

இது டி.கே.சி.யின் ரசிகமொழி! பெருண்மைகளை, அறிவியல் காட்சிகளை, ஆய்வோடும் விஞ்ஞான அறிவோடும் கண்டு, அவற்றைக் கலையுணர்வில் நின்று அனுபவிக்கிற கலைப் பாங்குதான் டி.கே.சியின் தனிச் சிறப்பு. அவருடைய வாழ்வு முழுவதும், எழுத்து முழுவதும், பேச்சு முழுவதும் இந்தக் கலைப் பண்பையே ஒருமித்துக் காண்கிறோம். ''

---

# நாமகிரிப்பேட்டை கூறிய நியாயம்!

நாதஸ்வர இசை என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். அதுவும் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வரம் என்றால் மிக மிகப் பிடிக்கும். சிறு வயது முதற்கொண்டே நான் இவருடைய பரம ரசிகன். மாபெரும் உலகப் புகழ் பெற்ற இந்த வித்வானை எப்படி எங்கே நாம் சந்திக்கப் போகிறோம் என்றெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தேன்.





சமீபத்தில் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் அவர்களுடைய இரண்டாவது மகன் எங்கள் சேஷசாயி காகித ஆலையில் வேலைக்குச் சேர்ந்தார். அவர் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பராகவும் ஆனார். அவருடைய திருமணத்துக்கு நான் சென்றிருந்தேன். அப்போது நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் அவர்களுக்கு என்னை அவருடைய மகன் அறிமுகம் செய்து வைத்தார்.

''நீங்கள் உங்கள் பெயருக்கு முன்னால் 'நாமகிரிப்பேட்டை' என்று போட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் வாழ்ந்து வருவதோ சேந்தமங்கலத்தில்தானே'' என்று கேட்டேன்.

''நாமகிரிப்பேட்டை என்ற ஊரில்தான் நான் பிறந்து வளர்ந்தேன். திருமணமான பிறகு என் மனைவியை அழைத்துக் கொண்டு என் தந்தையிடம் 'நான் பெரிய வித்வானாக ஆகிக் காண்பிக்கிறேன்' என்று ஒருசில தகராறுகளுக்கிடையே சவால் விட்டுவிட்டு சேந்தமங்கலத்தில் குடிபுகுந்தேன். இன்று உங்களைப் போன்ற உள்ளங்கள் பாராட்டும் அளவில் நாதஸ்வர வித்வானாகத் திகழ்கிறேன். என் பெயருக்கு முன்னால் என் சொந்த ஊரின் பெயரைப் போட்டுக் கொள்வதை நான் மிகவும் பெருமையாகக் கருதித்தான் போட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்று மிகவும் அடக்கத்தோடு அவர் கூறிய பதில் என்னை வியப்பில் ஆழ்த்தியது.

மேஜர்தாசன், ஈரோடு

மகாராஜபுரம் ஸ்ரீ சந்தானம் அவர்களுக்கு சிருங்கேரி மகா சன்னிதானத்தால் கான கலாநிதி என்ற பட்டம் அக்டோபர் 5ந் தேதி வழங்கப்பட்டது. விழா முடிந்து மறுநாள் நாங்கள் எல்லோரும் ஒன்றாக ரயிலில் சென்னை வந்து கொண்டிருந்தோம்.

அவசரத்தில் நான் மடத்தைச் சேர்ந்த தலையணையையும் எடுத்து வந்திருந்தேன். அதை அப்போதுதான் பார்த்தோம். உடனே சிருங்கேரிக்கு எழுதி அதைத் திருப்பி அனுப்ப வேண்டுமே என்று சந்தானம் பரபரப்புடன் இருந்தார். இவ்வாறு தவறு நேர்ந்துவிட்டதே என்று நானும் மன வருத்தத்தில் இருந்தபோது மிருதங்கவித்வான் ஸ்ரீ ராமபத்ரன் புன்னகையுடன்,

"சந்தானம்! ஏன் இப்படி வருத்தப்படுகிறீர்கள்? இப்படி எனக்கு ஒரு சிஷ்யன் இல்லையே என நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய சிஷ்யர்கள் எல்லோரும் நான் எடுத்துப் போகும் சாமான்களை யெல்லாம் மறந்து விட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இவனோ கவனமாக மற்றவருடையதையும் சேர்த்து அல்லவா எடுத்து வருகிறான்! உங்களுக்கு இப்படி அருமையானவன் கிடைத்தானே" என்றார். கவலை மறந்து குபீரென்று சிரித்துவிட்டோம்.

இப்படிப் பேச ஆரம்பித்தவர்தான், பயணம் முழுவதும் போனதே தெரியவில்லை. அன்றைய பேச்சிலிருந்து அவர் சிறந்த லய வித்வான் மட்டுமில்லை; உலக ஞானம் மிக்கவர் என்பதும் புரிந்தது.



ஆர். பாலசுப்பிரமணியன்

# இசை, நோய்களைக் குணப்படுத்தும்!

"சங்கீதத்தினால் நோய்களைக் குணப்படுத்த முடியும். நான் சிறிது நாட்களாக இந்த முயற்சியில் ஈடுபட்டது மட்டுமல்ல; ஓரளவு வெற்றியும் பெற்று வருகிறேன்!" என்று திரு பாலமுரளி கிருஷ்ணா ஒரு விழாவில் அறிவித்தார்.

இதைப் பற்றி அவரிடம் நேரில் கேட்டபோது —

"ஆமாம். அது சாத்தியமானது என்று அனுபவரீதியாகப் பார்த்துக் கொண்டு வருகிறேன். குறிப்பாக இரண்டு கேஸ்களை மட்டும் உங்களுக்குச் சொல்லுகிறேன். ஒருவருக்குப் பல நாட்களாக அசாத்தியமான இடுப்பு வலி. எழுந்திருக்கவும் முடியாமல், நடமாடவும் முடியாமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட பாடலை, ஒரு குறிப்பிட்ட ராகத்தில், நான் தினமும் காலை வேளையில் அவர் அருகே அமர்ந்து சிரத்தையுடன் பாடினேன். நோயாளி முழுக்க முழுக்கக் குணமடைந்து விட்டார்!"

"கேட்பவருக்கு இசை ஞானமோ, இசையில் நாட்டமோ வேண்டாமா?"

"தேவையில்லை. இசையில் ஒலி அலைகள் தாம் நோயாளியைச் சென்று அடைகின்றன. அவரிடம் மாற்றங்களை உண்டாக்குகின்றன. சில வியாதிகளுக்குச் சில சக்தி மிகுந்த மருந்துகளை உபயோகிப்பதில்லையா? அது போல, ஒலி அலைகளின் சக்தியை அதிகரிக்கச் செய்ய சில கருவிகளை வைத்துக் கொள்கிறேன். இயர்ஃபோன் கூட உபயோகிப்பதுண்டு."

"இன்னொரு கேஸ்?"

"ஒருவர் அசாத்தியமான தலைவலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். உடனடியான நிவாரணம் கிடைத்தது என் இசையின் மூலம். ஆனால் மருத்துவர்களாலும் குணப்படுத்த முடியாத மிக நாட்பட்ட—க்ரானிக்—தலைவலியைக் குணப்படுத்த இது வரை என் இசை மூலம் முயன்றதில்லை.....

"சில முக்கியமான வெளிநாட்டுக் கருவிகளை இறக்குமதி செய்ய மட்டும் முடிந்தால் இதில் பல அற்புதங்களை வெற்றிகரமாகச் செய்து காட்ட முடியும். அரசாங்கமும் ஒத்துழைத்தால் நல்லது!" என்றார் இந்த ஆந்திர அரசின் ஆஸ்தான வித்துவான்.

"உங்கள் பேஷண்டுகள் சிலரின் பெயரும் முகவரியும் தாருங்களேன்?" என்று கேட்டபோது,

"கட்டாயம் தருகிறேன்! ஆனால் இப்போது அல்ல. டிசம்பருக்குப் பிறகு நிச்சயம் என்னைக் கேளுங்கள் — விவரமாகக் கொடுக்கிறேன்!" என்றார்.

- சாருகேசி, தமயந்தி



ஒரு
உன்னதமான
புதிய படைப்பு!



# ஏந்நேரமும் காப்பியோ தேநீரோ பருகலாம், ஈகிள் கோஸி டீ பாட் இருக்கையிலே!




| மாடல்: | கீஷா | எக்ஸ்ப்ரெஸ்ஸோ | கார்லோம் | மைத்ரீ | ஸ்டுவார்ட் |
|---|---|---|---|---|---|
| கொள்ளளவு: | 8 கோப்பைகள் | 4 கோப்பைகள் | 2 கோப்பைகள் | 5 கோப்பைகள் | 8 கோப்பைகள் |

காப்பியோ தேநீரோ அடிக்கடி தயாரிப்பது ஒரு விதத்தில் பெரும் பிரச்சனைதான். மீண்டும் மீண்டும் பாலைக் காய்ச்சுவது, வடிகட்டிய தேயிலை, காப்பித்தூள் இவற்றைக் கழிப்பது, பாத்திரங்களைக் கழுவி சுத்தம் செய்வது, இவை போன்ற பல தொல்லைகள். இப் பிரச்சனைக்கு விடை காணுகிறது ஈகிள் கோஸி டீ பாட். ஒரே முறை தேநீரோ காப்பியோ தயாரித்து இதனுள் ஊற்றி வைத்திடுவீர். அவ்வளவுதான். பல மணி நேரங்களுக்கு விரும்பும்போது சுடச்சுட வெந்த மணத்துடன் தேநீரோ காப்பியோ பருகி மகிழ்ந்திடுவீர்.

இதனுள் இணைக்கப்பட்ட விசேட வாக்குவம் ஃப்ளாஸ்க் ரீஃபில், காப்பி, தேநீர் இவற்றை ஆவியாகும் சூட்டில் பாதுகாத்தளிக்கிறது.



**ஈகிள் கோஸி டீ பாட். பல மணி நேரங்களுக்கு சூடாக வைக்கிறது.**



CASE-133-203 TAM

# கிரிக்கெட் டெஸ்ட் வாசகர் பரிசு ரூ 1500/-

கீழே உள்ள மூன்றாவது கூப்பனைப் பூர்த்தி செய்து முடிவுதேதிக்கு முன் அனுப்பிவிடவும். டெஸ்டின் முடிவும் கூப்பனில் உங்கள் முடிவும் ஒத்துப்போனால் ரூ. 100 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும்.

ஐந்து டெஸ்ட்டுகளுக்கும் சரியான விடைகளைப் பூர்த்தி செய்து அனுப்புகிறவருக்கு ரூ. 1000 சிறப்புப் பரிசு. இதிலும் ஒருவருக்கு மேல் வெற்றி பெற்றால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும்.

கூப்பனில் அடித்தல் திருத்தல் இன்றித் தெளிவாய் எழுதவும். சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கடிதப் போக்கு வரத்துக் கிடையாது. உறையின்மேல் ''கிரிக்கெட் டெஸ்ட்'' என்று அவசியம் எழுதவும்.

**கூப்பன் நெ. 3 டெஸ்ட் 4 (கல்கத்தா) முடிவு தேதி டிசம்பர் 28**

| கேள்வி | விடை |
|---|---|
| 1. டாஸ் வெற்றி யாருக்கு? (கேப்டன் பெயர் எழுதவும்) | |
| 2. இந்திய அணியில் அதிகபட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 3. இங்கிலாந்து அணியில் அதிகப்பட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 4. இந்திய அணியில் அதிகபட்ச விக்கெட்டுகள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 5. இங்கிலாந்து அணியில் அதிகபட்ச விக்கெட்டுகள் எடுக்கப்போகிறவர்யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 6. நாலாவது டெஸ்ட்டின் தலைசிறந்த ஆட்டக்காரர் என்று தேர்ந்தெடுக்கப்படப் போவது யார்? | |
| 7. மாட்ச் ஏதேனும் ஓர் அணிக்கு வெற்றியாக முடியுமா? வெற்றி தோல்வி இன்றி முடியுமா? | |



என் கையெழுத்து: ____________________

பெயர்: ____________________

விலாசம்: ____________________

# உள் விரிசல்

## தி. ஜானகிராமன்

"பேஷாயிருக்கு—ரொம்ப பேஷ். நல்ல சுநாதம். ரொம்ப நன்னப் பண்ணியிருக்கேள்" என்று மாய்ந்து கொண்டிருந்தார் கோஸ்வாமி. தம்புராத் தந்திகளை மீட்டி மீட்டிப் பார்த்தார். ஜீவாக்களை நகர்த்தி நகர்த்தி, காதோடு காதாக தண்டியையை வைத்து மீட்டி மீட்டிப் பார்த்தார். கண்ணை மூடி மூடிக் கேட்டார். மீசையும் உதடும் புன் சிரிக்க "பேஷ் பேஷ்" என்றார்.

ராமலிங்கத்துக்கு உச்சி குளிர்ந்துவிடவில்லை. "என்ன இந்த மூக்கால்ரைக்கால் வேலைக்குப் பிரமாத பேஷ் போடுகிறார் இந்த மனுஷன்!" என்று அலுப்பாக இருந்தது.

"இன்னும் பத்து நாள் எங்கிட்ட இருந்துதுன்னா இன்னும் ஜிலுஜிலுன்னு நாதம் பூத்து வரும்" என்றார்.

"அதுசரி — இந்த ஏகாதசி பஜனைக்கு எப்படியாவது கொண்டு வந்துடறேன்னு சொல்லிப்டேன். இல்லாட்டா, உங்களை இப்படி கிட்டி கட்டுவேனா? போரும்னா — இதென்ன கச்சேரிக்குப் போற தம்புராவா? — பஜனை மடத்துக்கு இது போரும். பரம சௌக்யமாத்தான் இருக்கு. — எல்லாம் போரும்— இவா பண்ற பஜனைக்கு" என்று மறுபடியும் மீட்டி நாலு பேஷ் போட்டார் கோஸ்வாமி.

மிச்சப் பணத்தை வாங்கிக் கொண்டு வீதியில் இறங்கினார் ராமலிங்கம். "தம்புரா அமையறது பெண்டாட்டி அமையறதுமாதிரி —பஜனை மடத்துக்கு இது போருமாம். போகட்டும். பஜனை மடத்து சாமி கொடுத்து வச்சது அவ்வளவுதான்" என்று மனசு சிரிக்க வீதியில் நடந்தார்.

"வயசாயிடுத்து. வேற ஆள்கிட்டப் பண்ணிக்கிங்கன்னாலும் கேட்க மாட்டேங்கறாங்க. டயமும் கொடுக்க மாட்டேங்கறாங்க. ஆப்பைக் கூடு, மூக்காலி, சிக்குப் பலகாய் பல்லாங்குழி பண்ற நேரத்திலே இவங்களுக்குத் தம்புரா, வீணையெல்லாம் செஞ்சு கொடுத்திரணும் — என்ன காதோ, என்ன பொறுமையோ...."

கிணு கிணு என்று மணிச் சத்தம். வெண்கல மணிக்கு ஜலதோஷம் பிடித்தாற் போன்ற கிணு கிணுப்பு — செப்பு மணியோ — பித்தளை மணியோ. ஒரு தள்ளு வண்டியில் பஞ்சு மிட்டாய் பண்ணி விற்றுக் கொண்டிருந்தான் மிட்டாய்க்காரன். சுற்றிலும் குழந்தைகள். பேரன் குரல் ஞாபகம் வந்தது. கலர் பாக்ஸ், சாக்லேட், கடிகாரம் எல்லாம் வாங்கி வருமாறு உத்தரவு கொடுத்திருந்தான். மிட்டாய் வண்டி அருகே வந்தார். ஒரு சாராய நெடி அடித்தது. சர்க்கரை நெடியோ, சாராய நெடியோ தெரியவில்லை. புர்புர்ரென்று ஒரு தகர உருளை சுழன்றது. பிலுபிலுவென்று பஞ்சு பஞ்சாக ரோஜாக் கலரில் மிட்டாய் ப..ர்ந்தது. உருளையைச்





சுற்றிப் பார்க்க ஆச்சரியமாகத்தானிருந்தது. 'இப்படியே ஒரு மிஷினைப் பண்ணி பலா மரத்தைக் கொடுத்து, மணிக்கு நாலு தம்புரா பண்ணினால் எப்படி இருக்கும்?' என்று நினைத்துக் கொண்டார் ராமலிங்கம். சாராய நெடி லேசாக மிட்டாயிலிருந்து வர்லே வேண்டாம் என்று நகர்ந்தார். நாயக்கர் கடையில் நாலைந்து சாக்லேட்டும், ஒரு மெழுகு கலர்க் குச்சிப் பெட்டியும் வாங்கிக் கொண்டு நகர்ந்தார். பயல் வழிமேல் விழி வைத்திருப்பான். அவரைத் தூரத்தில் பார்த்ததுமே, படி இறங்கி, கண் காது தெரியாமல் ஓடி வருவான் — தாத்தா வந்தாச்சு — தாத்தா வந்தாச்சு என்ற கூச்சல்.

வீதியிலிருந்து சந்துக்குள் திரும்பினார் அவர். மூக்கை மூடிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. அதுவும் இந்தப் பேரன் ஞாபகத்தில் தான்.

''ஏன் இந்த ஊர்லெ வாசல்லெ சக்குச்சு வச்சிருக்கு வீடுங்கள்ள — ம்ஹும்'' என்று மாயவரத்திலிருந்து வந்த அன்றைக்கே கேட்க ஆரம்பித்தான்.

''ஏன், எங்க பார்த்தாலும் சந்துங்களா இருக்கு இங்க?'' என்று மறுநாள் கேட்டான்.

தலைமுறை தலைமுறையாகத் தஞ்சாவூரில் வளர்ந்த தோஷம் — வீட்டு வாசல்களில் திண்ணைக் கோடியில் குழிப்பிடங்களும், அவற்றை மறைக்கும் தகரத் திரைகளும் கண்ணுக்குப் பழக்கமாகிக் கண்ணுக்குப் படுவது கூட இல்லை. துர்க்கந்தமும் மூக்குக்குப் பழகிவிட்டது. குழந்தை கண்ணையும்



மூக்கையும் திறந்து விட்டான். அவன் பிறந்தது மாயவரத்தில்.

''பிரம்மாண்டமாகப் பெரிய கோவிலைக் கட்டின சோழ ராஜாவா இந்தத் தஞ்சாவூரைக் கட்டியிருப்பான்? ஹோ வென்ற கோயில் சுற்றுகளும் கோட்டையும் கட்டின சோழ ராஜாவுக்கா இப்படிச் சந்துகளும் வாசலில் கழிப்பிடமும் கட்டும் புத்தி வந்திருக்கும்! நாய்க்க ராசாக்களா மராட்டிய ராசாக்களா — இத்தனை சந்துகளைக் கட்டினவர்கள்'' என்று கேட்டுக் கொள்ளத் தோன்றிற்று அவருக்கு — குழந்தையின் துடுக்கைக் கேட்டு.

பத்து நாள் ராப்பகலாக அடை மழை பெய்தாலும் ஒரு பொட்டுத் தண்ணி வீதியில் தங்காது — சந்துகளில் தங்காது — சாக்கடைகளில் பாய்ந்து ஊருக்கு வெளியே ஓடிவிடும். பல வீட்டுக் கிணறுகளுக்குச் சிவகங்கையிலிருந்து அமிர்தமாகக் குடிநீர் பாயும் சுரங்க வழியாக. இப்படியெல்லாம் ஊரை பத்திரப் படுத்தினவர்களுக்கு இந்தச் சந்து பொந்து, வாசலில் கழிப்பிடம் எல்லாம் எப்படிக் கட்டத் தோன்றிற்று என்று குழந்தை வந்த நாளாக வந்த கேள்விகள் மீண்டும் முளைத்தன.

தஞ்சாவூரைப் பற்றி அடிக்கடி கேட்கிற பழைய நகைச்சுவைகள் நினைவுக்கு வந்து மனசு சிரித்தது. பகைவர்களின் படை ஊரை நெருங்கி வருகிறது என்று கேட்டு ஒரு ராஜா — பரம பக்தர் உடனே வண்டி வண்டியாக துளசி தளங்களைக் கொண்டு பெருமாளுக்குப் பூசை பண்ணினானாம். பிறகு கோட்டை மதில்கள் மீது அந்தத் துளசி தளங்களைத் தூவிவிட்டு வரச் சொன்னானாம். ''எப்பேர்ப்பட்ட பகைவர்களும் இந்தப் பிரசாதத்தைக் கண்டு அரண்டு ஓடி விடுவார்கள்'' என்றானாம். ஆனால் பகைப் படைகளின் குதிரைகள் அதே துளசிகளை மேய்ந்து விட்டு ஊருக்குள் புகுந்தனவாம்!

இன்னொரு நகைச்சுவையும் அவருக்கு ஞாபகம் வந்தது. வீதியோடு போகிறவன் திடீரென்று மழை வரவே குடை இல்லாததால் கால் செருப்பைக் கழற்றித் தலை மீது மழைக்குத் தடுப்பாக வைத்துக் கொண்டு நடந்தானாம். ஒரு நிமிஷம் கழித்து. ''இது என்ன காலமோ, அமர சிம்ம ராஜா காலத்திலே அமிர்த மழை பெஞ்சுதாம் — இப்ப என்னடான்னா சாணி மழை பெய்யுது'' என்று நொந்து கொண்டானாம்.

மனசு சிரித்தது ஊரை நினைத்து. இந்தச் சந்தில்தான் அவர் வீடும் தலைமுறை தலைமுறையாகப் பிழைப்பு நடத்துகிறது. தஞ்சாவூர்த் தம்புரா தம்புரா என்று இந்தச் சந்தையும் வீட்டையும் தேடிக் கொண்டுதான் பட்டணத்திலிருந்தும் பங்களூரிலிருந்தும். மதுரையிலிருந்தும் பாட்டுக்காரப் படை வருகிறது. மனசு சிரித்தது.

வீட்டுப் படி ஏறினார்.

உள்ளே வந்தார். பேரனைக் காணவில்லை. அரைக் கைச் சட்டையும் அம்மணமும், காலில் கொலுசும், தலையில் சுருள்களுமாக அந்தப் பயல் ஓடிவரவில்லை. அவருடைய கடைசிப் பையன் வீணைக்கு மக்கு வைத்துக் கொண்டிருந்தான்.

''சம்மோகம், சம்மோகம் — பட்டுக்குஞ்சி'' என்று கத்தினார் ராமலிங்கம். சண்முகம் வரவில்லை.

''கொளந்தை எங்கடா?'' என்றார்.

''அக்கா அளச்சிக்கிட்டுப் போயிருக்கு.''

''எங்கே?''

''பெரியக்கா ஊட்டுக்கு.''

''பெரியக்கா ஊட்டுக்கா? — திருவையாத்துக்கா? — எதுக்கு? எப்ப?''

''ஒரு நாளியாச்சு.''

''எதுக்கு இப்பப் பெரியக்கா ஊட்டுக்குப் போகணுமாம்? நான் வரத்துக்குள்ளார?''

''அம்மாவைத்தான் கேக்கணும்.''

கிழவி வந்தாள்.

''மீனாச்சி திருவையாத்துக்குப் போச்சாமே குளந்தையை அளச்சுக்கிட்டு?''

''ஆமா.''

''எதுக்கு — சொல்லிக்கக்கூட இல்லே!''

''பயந்துக்கிட்டு ஓடிரிச்சு.''

''பயந்துக்கிட்டா?''

''சட்டுப்புட்டுன்னு சொல்லேம்மா'' என்றான் சின்னப் பையன்.

''நான் இந்தப் புள்ளெ வந்தப்பவே நெனச்சேன். இந்தத் தம்புராவை யெல்லாம் கவரோட கவரா, கம்பிப் போட்டு கட்டி வைக்கணும்னு. நான் பயந்த மாதிரியே ஆச்சு. நீங்க தெருவிலே இறங்கியிருக்க மாட்டீங்க. பராங் பராங்னு நாலு தம்புராவையும் மீட்டிக்கிட்டே இருந்தான்.

எல்லாத் துணி
களையும் துவைக்க
'கீ' டிடர்ஜெண்ட் பவுடரை
விட மிகச்
சிறந்தது எது?



# புதிய! மேன்மையான

# கீ

அது
மாத்திரமில்லை
இதர முக்கியமான
டிடர்ஜெண்டுகளை
விட
30% விலை
குறைவானது.




CHAITRA-G-161 TAM

அதன்
மேன்மையைப் பாருங்கள்



இப்பொழுது 'கீ'யில்
மிகையான நுரைவளம்
பொங்குகிறது.



இப்பொழுது 'கீ' துணிகளை
மிகையான வெண்மையுடனும்
பளபளப்புடனும்
சுத்தம் செய்கிறது.

கோத்ரெஜ்
தயாரிப்பு

புதிய மேன்மையான 'கீ' யில் — அதிக
வெண்மையும் பளபளப்பும் காண்பீர்.

# யூ.எல்.ஐ.பி. ✚

## பாதுகாப்புக்கு மறு பெயர்




### அனைத்தும் அடங்கிய ஒரே சேமிப்புத் திட்டம்

மற்ற திட்டங்களைவிட பல்வேறு நன்மைகளைக் கொண்ட சிறந்ததொரு திட்டம்தான் யூ.எல்.ஐ.பி. +. உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் பாதுகாப்பு அளிக்கும் சேமிப்புத் திட்டம்.

யூ.எல்.ஐ.பி. + ன் நன்மைகள்

- உயர்ந்த வருமானம். உங்கள் சேமிப்புத் தொகை ரூ. 12000 திட்ட முடிவில் (10 ஆண்டில்) ரூ. 18000 மாகவும் (15 ஆண்டில்) ரூ. 22000 மாகவும் உயர்ந்து விடுகிறது.
- வரிச்சலுகை. இத்திட்டத்தில் முதலீடு செய்யும் உங்கள் தொகைக்கு பூரண வருமான வரி விலக்கு உண்டு.
- விபத்து பாதுகாப்பு. நீங்கள் எடுக்கும் திட்டத்தின் மதிப்பு எதுவானாலும், ரூ. 15000 வரை உங்களுக்கு விபத்து பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.
- ஆயுள் பாதுகாப்பு. நீங்கள் சேரும் திட்டத்தின் தொகைக்கு சமமாக உங்களுக்கு ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. மருத்துவ பரிசோதனை தேவையில்லை.
- ரூ. 24000 வரை சேமிக்கலாம். ரூ. 12000க்கு ஒரு திட்டமும் அதிலிருந்து 3 வருடங்கள் கழித்து அதே தொகைக்கு மற்றுமொரு திட்டமும் எடுத்துக் கொள்ளலாம்.

பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றே யூ.எல்.ஐ.பி. திட்டத்தில் சேர்ந்திடுங்கள்.

இதர விபரங்களுக்கு எங்களையோ அல்லது எங்கள் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகள் அல்லது உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளையோ அணுகுங்கள்.

எங்கள் தலைமை பிரதிநிதிகள் :

ஏ. தனபால், 10 ஜே. ஹுஸைர் ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் : 34776 (கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக)

எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்துக்காக)

கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007. போன் : 1224. (தஞ்சாவூர் மாவட்டத்துக்காக)




## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்) தலைமை செயலகம் : பம்பாய்-20

தெற்கு பிராந்திய செயலகம் :
ரெஜினு மேன்ஷன், 46, செகண்ட்லைன் பீச், சென்னை-600 001. தொலைபேசி : 27433

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாகவே இருக்கட்டும்**

UTI-62-81-Tam

அதோ ஸ்டூல் மேலே இருக்கே — அதப் போயி பராங் பராங்னு தந்தியைப் பிடிக்கக் கண்டிருன் பய. மடேர்னு கீள உளுந்தது. திகீர்னிச்சு எனக்கு. முதுகிலே நாலு வச்சா மீனாட்சி. விரல் பதிஞ்சுது. பொரண்டு பொரண்டு அழுதான். இந்தச் சனியனை ரண்டு நாளைக்காவது அப்பாலெ கொண்டு வச்சுக்கறேன். அப்பா வந்தாங்கன்னு அவங்க மூஞ்சில எப்படி முளிக்கறதுன்னு ரண்டு புடவையை எடுத்துக்கிட்டா. நான் திருவையாறுக்குப் போயி அக்காளையும் பாத்தாப் பல இருக்கும்னு கௌம்பிப் போறா. நாளைத் தெறிச்சு வந்திடறேன்னு போயிருக்கா. சொல்லச் சொல்லக் கேக்கலே.''

மென்று விழுங்கினாள் கிழவி.

மண்டையில் அறைந்த அதிர்ச்சி ராமலிங்கத்துக்கு. பலா மரத்தை ஒடுக்கு. முடிச்சு இல்லாமல் பார்த்து வாங்கி மாசக் கணக்கில், வருஷக் கணக்கில் சீசன் பண்ணி, குடைந்து குழந்தை பெறுகிறதுபோல தம்புராவைப் பெறுகிற கை சிலிர்த்து அதிர்ந்தது. ஸ்டூல் மீது சும்மாடு வைத்து சாய்ந்து நின்ற தம்புராவை மெதுவாக எடுத்து, கீழே வைத்து உட்கார்ந்தார் — மீட்டினார். துளி கலைந்திருந்த சுருதியைச் சேர்த்து மீட்டினார்.

சிறிது கண்ணை மூடிக் கேட்டார்.

''ஏய், கேட்டியாடா?'' என்றார் பையனைப் பார்த்து.

''ஆமாப்பா'' என்றான் பையன்.

''என்னடா ஆமாப்பா.''

''பொல்லுன்னு மலர்ந்து வருதே சத்தம்''

''இன்னொரு தடவை சொல்லு.''

பையன் சொன்னான்.

''தஞ்சாவூரிலேயே ஊறின மட்டையல்ல நீ. ஒரு பக்கம் பெரிய கோவில் — இன்னொரு பக்கம் சந்து. வாசப் பக்கம் கழிப்பு—பொல்லுன்னு மலர்ந்து வருதேன்னு ஆரம்பிச்சே— அப்புறம் சத்தங்கிறியே — ஏன்டாப்பா சத்தமா இது — நாதம்னு சொல்ல வாரலியா?''

மீண்டும் மீண்டும் மீட்டினார் அவர். வியந்து கேட்டார். குடத்தை ஊன்றி ஊன்றித் திருப்பித் திருப்பிப் பார்த்தார். மீட்டினார்.

அப்பால் மூலையில் சாத்தியிருந்த தம்புராவை எடுத்தார் மீட்டினார். இன்னும் மற்ற இரண்டு தம்புராக்களையும் மீட்டினார். பிறகு குழந்தை தள்ளின தம்புராவை மீட்டினார். திருப்பித் திருப்பிக் குடம், தண்டி எல்லாவற்றையும் பார்த்தார்.

''ஏய், பொல்லு மலர்ந்திருக்குல்லியே— ஏன் தெரியுமா?''என்றார் பையனைப் பார்த்து.

''......''

''ஏன் தெரியுதா?''

''புள்ளை தள்ளினதுதான் தெரியும்.''

''புள்ளை தள்ளிச்சி. உள்ளார விரிசல் வந்துது. உன் விரிசலுக்குத்தான் இந்த மகாத்மியம்.''

கணக்கு மேசை மூடியை மல்லாத்தி நூல் கண்டை எடுத்தார். கெட்டி முறுக்கு நூல் கண்டு. ஒரு தம்புராவின் மீது பிருடையில் நூலைக் கட்டி மெதுவாக எடுத்து உத்தரத்தில் நூலைக் கட்டினார். தரையிலிருந்து ஒரு முழம் உயரத்தில் தம்புரா மெதுவாக




அசைந்துதொங்கிற்று. கத்திரிக்கோலை எடுத்து ''ஆண்டவனே'' என்றார். உத்தரத்திலிருந்து தம்புராவைத் தாங்கி நிற்கும் நூலை நறுக்கென்று கத்தரித்தார். டப்பென்று ஓசையும் தந்தியின் முனகலுமாக தம்புராக் குடம் தரை தட்டிற்று. கீழே விழாமல் தண்டைப் பிடித்துக்கொண்டார். மீட்டினார்.

''ஆமாப்பா!''

''இப்பவாவது சொல்லு. பொல்லுன்னு மலர்ந்து வருது நாதம்னு.''

''ஆமாப்பா.''

''உன் விரிசல், உள்ளே விரியணும் — உடையாம — லேசா — துளியூண்டு — இக்கினியூண்டு விரியணும் — அப்பத்தான் சிறையிலேர்ந்து பம்மிக்கிட்டு ஓடிவரும் நாதம்—''

மற்ற இரண்டு தம்புராக்களும் ஒரு முழ உயரத்தில் தொங்கி, தரை தட்டின. சிறை திறந்தது.

பையன் கண்ணை அகட்டிக் கேட்டான். ''சம்முகத்துக்குத் தங்கக் காப்பு தட்டிப் போடணும்.''

''போடு — போடு — சேதி இப்படியே இருக்கட்டும். உன் விரிசலை ஊருக்குச் சொல்லிக்கிட்டுத் திரிய வேணும் — உனக்கும்தான் சொல்றேன்'' என்று கிழவியைப் பார்த்தார் ஆசாரி.

## 11

இப்படியென்று ஊர்ப் பஞ்சாயத்தைக் கூட்டி இருக்கிறார்கள்.

யாருக்கும் காரணம் தெரியவில்லை. கிராமத்தில் ஒரே பரபரப்பு.

வழக்கம்போல் மேடையில் குழந்தைவேல் மற்றும் கிராமத்துப் பெரிய மனிதர்கள் கூடி இருக்கிறார்கள்.

அவசரமாக ஞானுவும் சுகன்யாவும் அழைக்கப்பட்டார்கள்.

என்ன என்ன என்று ஊர் முழுவதும் கேள்வி கேட்டபடி அங்கே கூடி இருந்தது.

ஞானு மீது வரிசையாகக் குற்றங்கள் சாட்டப்பட்டன.

ஞானு இனி பூஜை பண்ணக் கூடாதாம்.

கோயில் பூஜை செய்ய ஞானு இனி லாயக்கற்றவனும்! ஞானு ஓடக்காரப் பெண் செல்லியுடன் அக்கரையில் கொஞ்சிக் குலாவியதைக் குழந்தைவேல் பார்த்துவிட்டாராம்!

வயிற்றுவலி வியாதிக்காக அக்கரை போனவர் இருட்டுகிற நேரம் ஊர் திரும்ப நினைத்த போது அக்கரையில் ஞானு செல்லியுடன் கொஞ்சிக் கொண்டிருந்தானும்!

ஏற்கனவே சுகன்யா இவனுக்காக இங்கே தவம் கிடந்து காத்திருக்க, இவன் இப்படி அயோக்கியத்தனமாக நடந்து கொண்டது அக்கிரமமாம்!

யாருமே ஞானுவிடம் இது உண்மையா என்று கேள்வி கேட்கவில்லை!

வரிசையாக அவன் மீது குற்றம் சுமத்தப்பட்டன.

அக்கிரமம்!

கிரமங்கள் மாறும்போது எல்லாமே அக்கிரமங்கள்தான்!

ஞானு இப்போது கிராமத்தைப் பற்றியும் அதன் மனிதர்களைப் பற்றியும் கவலைப்படவில்லை. அவன் இப்போது கவலைப்பட்டதெல்லாம் செல்லியைப் பற்றித்தான். பஞ்சாயத்து முடிந்து இந்தச் சங்கதி வெளியில் தெரிந்தால் செல்லியின் கதி என்னவது?

''எங்க சாதியிலே தலையை சீவிவிடுவாங்க'' என்றாளே செல்லி. சீவப்பட வேண்டிய தலைகள் பல இங்கே காத்திருக்க, எங்கோ அநியாயமாக ஒரு தலை உருளப் போகிறதோ?

ஞானு நடுங்கினான்.

உத்தம குலத்துப் பிள்ளை நீசனாகிவிட்டானும். இனி இவன் பூஜைக்கு ஏற்றவன் இல்லையாம். அக்கரையிலிருந்து புது குருக்கள் வரும்வரை கோயில் பூட்டப்படுமாம்!

பஞ்சாயத்தார் வரிசையாகக் கூறிக்கொண்டிருந்தார்கள்.

கிராமம் கேட்டுக் கொண்டிருந்தது.

ஓடக்காரப் பெண் செல்லியைத் தண்டிக்க பஞ்சாயத்துக்கு உரிமை இல்லையாம்! அவளுக்கு உரிய தண்டனையை அவங்க சாதி ஜனங்களே தந்துவிடுவார்களாம்!

செல்லி!

ஐயோ...அவளுக்கு அவர்கள் என்ன தண்டனை தரப் போகிறார்களோ? — ஞானு நடுங்கினான்.

சுகன்யா பிரமை பிடித்தவள் போல் அமர்ந்திருந்தாள். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.

ஞானு...இந்த ஞானுவா? இருக்காது... இந்தப் பஞ்சாயத்துக்காரர்கள் உண்மையை பார்க்கத் தவறி விட்டார்கள்!

கெட்டுப்போன சுகன்யாவைப் பற்றிய உண்மைபுரியாமல் அவர்கள், 'சதி சுகன்யா'வுக்கு வாழ்வு தருவதாக நினைத்துக் கொண்டு ஒருபெரிய பள்ளத்தையே தோண்டிக் கொண்டிருக்கிறார்கள்!

ஞானு! இந்தப் பள்ளத்தில் முதல் பலி நீயாகத்தான் இருக்கப் போகிறாய்!



# குமரிப் பெண்ணே! குயிலாளே!

— விமலா ரமணி —

ஞானு! உன் கண்களைக் குத்த வேண்டும் என்று நான் வேடிக்கையாக நினைத்ததுஉண்டு. இன்று நிஜமாகவே குத்திவிட்டேன் ஞானு. இவர்கள் ஏதேதோ கேள்வி கேட்கிறார்களே.. நீ என்ன பதில் சொல்லப் போகிறாய்?

நடேச சாஸ்திரிகளின் அப்பழுக்கற்ற பெண் கன்யா புடம் போட்ட பொன்னாக உனக்காகக் காத்திருக்கிறாளாமே!

நான் புடம் போட்ட பொன்இல்லை..வெறும் காக்காய்ப் பொன் — என்பதை இவர்களிடம் சொல்லிவிடு ஞானு... இனிதான் நான் அக்கினிப் பிரவேசம் செய்து புடம் போட்ட பித்தளையாக மாற வேண்டும்... அதையும் சொல்லிவிடு ஞானு...எனக்கு நான் விரும்பிய இடத்தில் கல்யாணம் பண்ணி வைப்பதாக அப்பாவிடம் சொன்னாயே... எனக்குக் கல்யாணம் பண்ணிவை.... ஆமாம்.. உண்மையை ஊரார் முன் கூறி என்னைக் கெடுத்தவனுடன் என் வாழ்வை இணைத்து வை... கொஞ்சம் கொஞ்சமாக அவன் காட்டிய ஆசையில் நான் மோசம் போய் விட்டேன் ஞானு.

'இது தப்பில்லை...இது தப்பில்லை' என்று சொல்லியே என்னைத் தவற வைத்துவிட்டான் ஞானு.

புது ஊருக்கு மருமகளாகப் போகிறோம் என்கிற மகிழ்வில் நம் பழைய கிராமத்தின் கட்டுப்பாடுகளை, பண்பாடுகளை மறந்து போனேன் ஞானு!

ஞானு நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!

அந்த நாயரிடம் சொல்லி....

யோசிக்க யோசிக்க கன்யா



வுக்குத் தலைசுற்றுகிற மாதிரி தோன்றியது.

பஞ்சாயத்துக் கூட்டத்தில் அமர்ந்தவள் திடீரென்று அப்படியே அங்கேயே சாய்ந்து விட்டாள்.

''ஐயய்யோ... அய்யிரு பொண்ணு மயங்கி விழுந்திடிச்சி... சீக்கிரம் வாங்க... வாங்க....''

கூட்டம் காற்றை அடைத்துக் கொண்டு சுகன்யாவைச் சூழ்ந்து கொண்டது.

''பாவம்... குருக்கள் அய்யாவோட பொண்ணு... இந்த மாதிரி ஞானு பண்ணுவான்னு நினைச்சே பார்த்திருக்காது. அதான் மயங்கி விழுந்திடிச்சு!''

''ஆன மட்டும் நானும் அடிச்சுக்கறேன். இந்த ஊருக்கு ஒரு டாக்டர் வேணும்னு... ஒரு பய வரமாட்டேங்கறானே!''

''அட! விறுவிறுன்னு பாலத்தைக் கட்டுங்கடான்னு அதுக்கும் ஆயிரத்தெட்டுத் தடை! அரசாங்க உத்தரவு... சிமிண்ட் பர்மிட்... சே...சே...சே...''

சுகன்யாவைப் பரிசோதித்துக் கொண்டிருந்தது பெண்கள் கூட்டம்.

திடீரென்று ஒரு பரபரப்பு!

ஊர் சனங்கள் ஒருவர் காதை ஒருவர் கடித்துக் கொண்டனர்.

மேடையில் அமர்ந்திருந்த பஞ்சாயத்துத் தலைவர்கள் விவரம் புரியாமல் விழிக்க... வயதான பெண் ஒருத்தி குழந்தைவேல் காதைக் கடிக்க... கடிபட்ட வேகத்தில் அவர் 'அப்படியா சங்கதி?' என்று உறும... என்ன இதெல்லாம்? ஞானு பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அல்லா சனமும் நான் சொல்லப் போறதைக் கவனமாக் கேளுங்க. இந்தச் சின்ன ஐயாவை நம்பி பெரிய அய்யா மட்டும் மோசம்போகல்லே. பாவம்... இந்த சுகன்யா அம்மாவும் மோசம் போயிட்டாங்க! பெரிய அய்யா சுகன்யாவைத் தனக்குத்தானே கட்டி வைக்கப் போறார்னு ஒரு தைரியத்துலே இந்த ஞானு அந்தப் பொண் கிட்ட விளையாடிட்டான்! ஆமாம்... இப்போ அந்தப் பொண் புள்ளை உண்டாகியிருக்காம்! பொம்பளைங்க சொல்றாங்க... இனிமே இந்த விஷயத்தை இத்தோட விட்டு வைக்கக் கூடாது. உடனே அந்த அபலைப் பொண்ணோட கஷ்டத்தை நீக்கணும். இந்த ஞானுப் பையன் பெரிய ஆள். இப்போ விட்டோம்னா இவன் தப்பிடுவான். ஒரே வீட்டுக்குள்ளார சின்னஞ் சிறுசுகள். பெரிய ஐயாவும் இறந்துட்டார். தப்பு நடந்திடுச்சு! போகட்டும். ஆனா இவன் தப்புக்கு மேலே தப்பு இல்லெ பண்ணிட்டுப் போறான்! இக்கரைக்கு சுகன்யா அக்கரைக்கு செல்லியா? என்ன அக்கிரமம் இது? இந்தக் கிராமத்துக் கட்டுப்பாடு என்ன? பழக்க வழக்கம் என்ன? எல்லாம் இந்த ஞானு வந்ததுலே இருந்து நாசமாயிடுச்சு. சதுர்த்தி விழா பண்றேன்... பண்றேன்னு சொல்லி அக்கிரமம் பண்ணி இருக்கான். இவனைக் கட்டி வைக்க உதைக்கணும். ஒசந்த சாதியா இருந்தா என்ன? தாழ்ந்த சாதியா இருந்தா என்ன? தப்பு தப்புத்தான்!



''ஆனா... அந்தப் பெரியவருக்காக நாம தண்டனையைக் குறைச்சுக்கணும். அதனால ஒரு வாரத்துக்கு ஞானுவுக்குச் சோறு தண்ணி எதுவும் தரப்படாது. அதுக்குள்ளாரக் கல்யாண ஏற்பாடு பண்ணி இந்த சுகன்யாவுக்கு இவனைக் கட்டி வைச்சு ஊரை விட்டே அனுப்பிடணும்.... இனிமே இவன் இந்தப் பிள்ளையார் கோயில் பூசைக்கு லாயக்கில்லாதவன்.''

குழந்தைவேல் வரிசையாகக் கூறிக்கொண்டிருந்தார்.

ஞானு விரக்தியாகச் சிரித்தபடி கேட்டுக்கொண்டிருந்தான்.

'பிள்ளையாரப்பா... நான் பட்டினி கிடக்கறதைப் பத்திக் கவலைப்படலே... ஆனா ஒரு வாரத்துக்கு உன்னையும் பட்டினி போடப் போறானே இவா! இவாளோட அறியாமையை மன்னிச்சுடுப்பா. ஒருத்தருக்குமே தெரியாம இருந்த உன்னை ஊர் முழுக்க அக்கரைக்கும் பிரபலப்படுத்தினேன். நீ பொல்லாதவன். என்னையும் பிரபலப்படுத்திட்டே!'

யார் அந்த ஞானுவா?

சுகன்யாவைக் கெடுத்தானே அந்த ஞானுவா?

செல்வியோட கள்ளத் தொடர்பு வைச்சிருந்தானே... அவனா?

இப்படித்தானே இனிமே என்னைப் பத்தி இவாள்ளாம் பேசப் போறா! நான் என்ன பண்ணுவேன்?

இது இத்தனையும் பொய்யின்னு ஒரு நொடியிலே சொல்லிடுவேன்... ஆனா...ஆனா.... உத்தமரான நடேச சாஸ்திரிகளோட ரத்தத்திலே வந்த பிரும்ம குலப் பொண் சுகன்யாவைப் பத்தி இவாள்ளாம் ஓர் உயர்ந்த அபிப்பிராயம் வைச்சிருக்கறச்சே, அதை உடைச்செறிஞ்சு, 'இல்லே நீங்க சொல்றது பொய்... கெட்டுப்போனது நானல்ல..... சுகன்யா தான்.... அவ வயித்துக் கருவுக்கு அப்பன் நான் இல்லே'ன்னு இரைஞ்சு சொல்லத்தான் முடியுமா? பரவாயில்லே... அக்கரையிலே வாழ வழி தெரியாமத் திண்டாடிண்டு இருந்தவனுக்கு நடேச சாஸ்திரிகள் வாழ்வு தந்தார்.

அவரோட வம்சத்தை நான் களங்கப் படுத்தலாமா?

இந்த மனுஷாள் என் மேலே பூசற களங்கச் சேறு என்னை ஒண்ணும் பண்ணாது! நான் இதைப் பத்திக் கவலைப்படப் போறதில்லே..என்னா... நான் சத்தியமா நல்லவன். சத்தியங்கள் கண்டிப்பாய் ஜெயிக்கும். ஒரு நாள் ஜெயிக்கும். புலராத ஒரு பொழுதிலே இந்தக் கிராமத்திலே அடி எடுத்து வைச்சேன். அதே மாதிரி புலராத ஒரு பொழுதிலே இவா என்னை இதே கிராமத்தை விட்டு வெளியேத்தவும் போறா!

என்னைப் பொறுத்தவரை பொழுதுகள் புலரவே இல்லே!

''என்ன ஞானு... என்ன யோசிச்சிட்டு இருக்கே? நாங்க பேசினது காதிலே விழுந்தா?''

குழந்தைவேல் ஞானுவின் மரியாதைகளை எல்லாம் பறக்க விட்டு விட்டு ஒருமையில் பேசினார். ஞானு பேசாமல் இருந்தான்.

''சுகன்யாவோட வயிற்றுக் கருவுக்கு அப்பன் நீதானே? இந்தப் பஞ்சாயத்து முன்னாலே உண்மையை ஒத்துக்கோ.''

குழந்தைவேல் மீசையில் ஒரு கையும் வயிற்றில் ஒரு கையுமாக வைத்தபடி கேட்டார்.

'ட்ரபுள்... சனியன் வயிற்று வலி ஆரம்பமாகிவிட்டது. சனியன் பிடிச்சவ... பஞ்சாயத்துக்குக் கிளம்பற நேரத்திலே எதையோ கொணந்து திங்கக் கொடுத்தா! வலி ஆரம்பமாகுதே!'

ஞானு மௌனமாக இருந்தான்.

''வாய் திறந்து பேசு... உம்...''

சுகன்யா அங்கு என்ன நடக்கிறது என்பதை அறியாமல் இன்னமும் மயக்கத்தில் தான் கிடக்கிறாள்.

அவளைச் சுற்றிப் பெண்டுகள் கூட்டம். சுகன்யாவின் அருகில் அமர்ந்தபடி... விசிறியபடி. முகத்தில் தண்ணீர் தெளித்தபடி அவர்கள் இருந்தனர். சுகன்யா... பரவாயில்லே,... உனக்கு மயக்கம் வந்து விட்டது! எனக்கு மயக்கமும் வரவில்லே. மரணமும் வரவில்லே....!

ஞானு இன்னமும் பேசாமல்தான் இருந்தான்.

''அவன் என்ன பேசறது அண்ணாச்சி? அதான் அவனோட மௌனமே அவனோட தப்பைக் காட்டிக் கொடுக்குது இல்லே...?''

''இல்லே... ஞானு வாயைத் திறந்து குத்தத்தை ஒத்துக்கட்டும். ஞானு... இந்தப் பஞ்சாயத்து முன்னாலே நீ உன்னோட தப்பை ஒத்துக்கோ... சுகன்யாவோட வயித்துப் பிள்ளைக்கு அப்பன் நீதாங்கிற உண்மையை ஒத்துக்கோ....''

''டேய்... பேசடா... வாய் திறந்து பேசடா!''

''ஞான் பறயாம்!''

குரல் வந்த திசையை நோக்கி அத்தனை பேரும் பார்த்தனர்.

நாயர் கம்பீரமாக எழுந்து நின்றான்.

''ஈ குஞ்ஞுண்ட அச்சன் யாரான்னு ஞான் பறயாம்.''

(தொடரும்)

உங்களைப்
போன்றவர்களை
திருப்தி செய்ய
சார்மினாரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்பீர்

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது
STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

CASVS-259-203 TAM

Main Dealer: M/s SULTAN SALEEM & SONS
WARANGAL – 506 002

**சென்னையில் வழக்கமாகக் கூடும் இசை மகாநாடுகள் தவிர இந்த ஆண்டு புதிதாக கிருஷ்ணகான சபையும் மாநாடு நடத்துகிறது. இதற்கு அவசியம் என்ன நேர்ந்தது? மற்ற மாநாடுகளிலிருந்து இது எப்படி வேறு படுகிறது?**



✠ பேராசிரியர் சந்திரசேகர்

திறமையும் இருந்து, கலைத்தொண்டும் செய்கிற யாரும் தாங்கள் கௌரவிக்கப்படவில்லையே என்ற குறையே வேண்டாம். இருக்கவே இருக்கிறார் கிருஷ்ண கான சபா செயலர் திரு யக்ஞராமன்! பாருங்கள், பரோடாவில் இருக்கும் கலைஞர் ஒருவரைக் கண்டு பிடித்து. இந்த ஆண்டு இவருக்குத்தான் 'நிருத்ய சூடாமணி' விருது கொடுப்பது என்று தீர்மானித்திருக்கிறாரே!

''இது என்ன புதுசாய் 26வது கலைவிழா—கருத்தரங்கு என்று போட்டிருக்கிறீர்கள்?''

''ஆமாம்! கான்ஃபரன்ஸ் என்று போட்டால்தான் கவனிக்கிறார்கள் நம்மை! நான் செய்வதற்கும் அங்கீகாரம் கிடைக்கிறது. இருபத்தைந்து கலை விழாக்கள் நடத்தி விட்டேன். மற்ற மாநாடுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக இப்போது நாட்டியக் கலைக் கருத்தரங்கு என்றதுமே கவனம் எங்கள் மீதும் திரும்புகிறது பாருங்கள்!''

''அப்படியானால் இதில் இசைக்கு முக்கியத்துவம் இல்லையா?''

''இருக்கிறது. காலையில் நாட்டியம் பற்றிக் கருத்தரங்கு — செயல் விளக்கங்களுடன், மாலையில் இசைக் கச்சேரி. இரவு நாட்டியம்!''

''இந்த முறை நிருத்திய சூடாமணி விருது பெறும் சந்திரசேகர் அவர்களை எங்கள் வாசகர்களுக்குச் சற்று அறிமுகப்படுத்துங்களேன்?''

''திரு சந்திரசேகர் இத்தனை வருடங்களுக்கு முன்பே கிருஷ்ணகான சபாவில் ஒரு நடன நிகழ்ச்சி வழங்கினார். கலாக்ஷேத்ரா மாணவர். பதினைந்து வருடம் இசையும் பயின்றவர். பரோடா பல்கலைக் கழகத்தில் நாடகத் துறை — இந்திய இசைக் கல்லூரி ஆகியவற்றின் பிரின்ஸிபல். ஸிம்லாவில் பிறந்த தமிழர். வடக்கே போய் நம் பரத நாட்டியக் கலையைப் பிரபலப்படுத்திய தமிழர் ஒருவருக்குச் சரியான சமயத்தில் பாராட்டுக் கொடுப்பதில் எல்லோரும் மகிழ்ச்சி அடைவார்கள். ஒரு கலைஞர் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டு திடகாத்திரத்துடன் இருக்கும்பொழுதே — 45லிருந்து 50 வயதுக்குள்ளேயே கௌரவித்துவிட வேண்டும் என்று நினைப்பவன் நான்!''

''இவரை இவ்வாண்டு தேர்ந்தெடுக்க ஏதேனும் தனிப்பட்ட காரணம் உண்டா?''

''ஏழு பெண் — நடனக் கலைஞர்களுக்கு இதுவரை நிருத்யசூடாமணி விருது கொடுத்து விட்டோம். இதே தரமும் தகுதியும்படைத்த இன்னொரு பெண்மணியை இவ்வாண்டு தேர்ந்தெடுப்பதில் நான் ஈடுபட்டிருந்த போது, ஆண் நடனக் கலைஞர்களை ஏன் ஒதுக்கி வைக்க வேண்டும் என்று ஒருமுறை விமர்சகர் சுப்புடு எழுதியது நினைவுக்கு வந்தது. இவரை விடப் பொருத்தமான நடனக் கலைஞர் யார் இருக்க முடியும்.. இந்த முதல் கருத்தரங்கை நடத்திக் கொடுக்க?''

—சாருகேசி

✠ வயலின் சந்திரசேகருக்கு சூடாமணி விருது வழங்கிய போது யக்ஞ ராமனுடன் இசைக் கலைஞர்கள், அறிஞர்கள்.



# என் குரு



○ எஸ். ராமநாதன்

பிறந்தது: வளவனூர், தென்னாற்காடு.

இளமையில்: திருவிழிமிழலை சகோதரர்கள் செம்பொன்னார் கோயில் சகோதரர்கள் நாதசுரம் கேட்டு இசையில் ஆர்வம். பிறகு திருக்கோயிலூர் இராமுடு பாகவதரிடம் இசைப் பயிற்சி - தொடக்கம்.

பட்டம்: சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் சங்கீத பூஷணம் பட்டம். தஞ்சை பொன்னையாப் பிள்ளை, டைகர் வரதாச்சாரியார், திருவையாறு சபேச ஐயர், சாத்தூர் கிருஷ்ணய்யங்காரிடம் இசைப் பயிற்சி. வாளாடி கிருஷ்ணையர்; தேவகோட்டை நாராயணய்யங்காரிடம் வீணைப் பயிற்சி.

1960. சங்கீத நாடகச் சங்கத்தில் இசை ஆராய்ச்சியாளராகப் பணி.

1962. சென்னை அரசு கர்நாடக இசைக் கல்லூரியில் பேராசிரியர்.

1969-1977. மதுரை இசைக் கல்லூரி முதல்வர். கேரளா பல்கலைக் கழகத்தில் நுண்கலைப் பிரிவு Dean.

1964-65, 70-72. அமெரிக்காவில் வெஸ்லியன், கோல்கேட், இல்லினாய், வாஷிங்டன் பல்கலைக் கழகங்களில் இசை விரிவுரையாளர்.

1972. சிலப்பதிகாரத்தில் இசை என்ற ஆய்வு எழுதி வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம்.

1980 சென்னை இயலிசை நாடக மன்றத்தில் கலைமாமணி பட்டம்.. வீணை, வாய்ப்பாட்டு கச்சேரிகள்.

மற்ற சிறப்புக்கள்: 1956 முதல் மியூசிக் அகாடமி, தமிழிசைச் சங்க மாநாடுகளில் கலந்துகொண்டு வந்தவர். இவற்றில் ஆராய்ச்சிக் குழு உறுப்பினர். பம்பாயில் சாரங்கதேவ பட்டம். எழுதிய நூல்கள் ஏராளம்.

இந்த வருடம் தமிழிசைச் சங்கம் திரு ராமநாதன் அவர்களுக்கு 'இசைப் பேரறிஞர்' பட்டம் வழங்கிக் கௌரவிக்கிறது. அறுபத்து நான்கு வயதான தேர்ந்த கலைஞர் திரு ராமநாதன் பற்றி அவருடைய சிஷ்யையான திருமதி சீதாமணி சீனுவாசன் சொல்கிறார்:

ஸ்ரீமதி சீதாமணி ஸ்ரீனிவாசன் ○

''எளிமையின் மறு உருவம்தான் என் குரு. தோற்றத்தில், வாழ்க்கையில், பாடம் சொல்லும் முறையில் எளிமையைக் கண் கூடாய்க் காணலாம். கடினமான ராகங்கள், கீர்த்தனங்கள், பல்லவிகள் எதையுமே மிகச் சுலபமாய்ப் புரிய வைக்கும் ஆற்றல் அவருக்குண்டு. பெரிய வித்வான்கள் மட்டுமின்றி இளம் கலைஞர்களையும் நன்றாய்ப் பாடினால் மனம் விட்டுப் பாராட்டுவார். அடுத்தவர்களிடம் குற்றம் குறை காணும் புத்தி இல்லாதவர். மூன்றாவது மனிதர் பற்றி யாரேனும் குறை சொன்னாலும், 'அவரிடம் உள்ள நல்லதை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கூறுவார்.

என்னால் மறக்க முடியாத ஒரு சம்பவம்: ஒருநாள் இசைவகுப்புக்கு என்னால் போகமுடியாமல் போய்விட்டது. நான் அவருக்கு விஷயத்தைப் ஃபோனில் தெரிவித்தேன். கொஞ்ச நேரத்தில், அவரே என் வீட்டுக்கு வந்துவிட்டார். அவரைக் கண்டதும் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. 'நீ வரலைன்னா என்ன? நான் வந்துட்டேன். பாடு' என்றார். நான் நெகிழ்ந்து போய்விட்டேன்.

வகுப்பில் ஒரு நிமிடம்கூட வீணாக்காமல், சங்கீதம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். அன்றாடம் நடந்ததை மறுநாள் பாடிக் காட்ட வேண்டும். சிஷ்யர்களுக்கு ஊக்கமளித்து அவர்களைப் பாட வைக்கும் இயல்பே தனி. எல்லாவற்றிலும் அவருக்கு 'பர்ஃபெக்ஷன்' வேண்டும். ஸாஹித்யங்களை மட்டும் சொல்லித் தராமல், அவற்றின் அர்த்தங்களையும் விளக்கமாய் எடுத்துச் சொல்வார். அயல் நாடுகளிலிருந்து இங்கு வரும் மாணவர்களுக்கு அவர் ஆங்கிலத்தில் விளக்கம் தந்து சொல்லித் தரும் பாடங்களை நாள் முழுதும் கேட்டுக் கொண்டிருக்கலாம். வீணையில் அவருடைய அபார பாண்டித்தியத்தை ஆச்சரியத்துடன் அனுபவித்திருக்கிறேன்.

பேட்டி: எஸ். சந்திரமௌளி

படம்: உ.க்ரா



# என் சிஷ்யர்

இந்த ஆண்டு மியூஸிக் அகாடமியின் சங்கீத கலாநிதி விருது பெறுபவர் திரு. டி. எம். தியாகராஜன். இவருடைய குருவான ஸ்ரீ செம்மங்குடி சீனிவாச ஐயர், சிஷ்யரைப் பற்றி சொல்கிறார்:

"தியாகராஜனின் தகப்பனார் ஸ்ரீ மகாலிங்கம் பிள்ளை சிறந்த மிருதங்க வித்வான். முதலில் தியாகராஜன் சங்கீதம் கற்றுக் கொண்டது தன் தகப்பனாரிடம்தான். திருவனந்தபுரம் சுவாதித் திருநாள் சங்கீத கலாசாலை பிரின்ஸிபாலாக இருந்த நான் 1941ம் வருஷம் ஏப்ரல் மாதம் தஞ்சாவூர் போயிருந்தேன். தஞ்சாவூர் வைத்தியநாதய்யர் என் சிநேகிதர். அவர்தான் தியாகராஜனை என்னிடம் அழைத்து வந்து பாடச் சொன்னார். ரொம்ப நன்றாய்ப் பாடவே, எனக்குத் தியாகராஜனைப் பிடித்துப் போய்விட்டது. நான் தியாகராஜனை என்னுடன் அழைத்துக் கொண்டு போகிறேன் என்றேன். தியாகராஜனுடைய அப்பா, சம்மதித்தார்.

தியாகராஜன் என் வீட்டிலேயே நாலு வருஷம் தங்கிச் சொல்லிக்கொண்டான். ரொம்பப் புத்திசாலி. சங்கீதம் சொல்லிக் கொடுப்பதில் துளிகூடச் சிரமமே இருக்காது. ராகம், லயம், எல்லாம் ஒரு தரம் சொல்லிக் கொடுத்தால் போதும். சட்டெனக் கிரகித்துக்கொள்ளும் திறமை உண்டு. காலை, பகல், இரவு எந்த நேரத்தில் சங்கீதம் சொல்லிக் கொடுக்க அழைத்தாலும், முகம்சுளிக்காமல், ஆர்வமாய்க் கேட்டுக்கொள்ளும்குணமுடையவன். தியாகராஜனுடன்தான் ஹரிஹர ஐயர், கேதார்நாதன், டி.என். கிருஷ்ணன் ஆகியோரும் சங்கீதம் கற்றனர்.

நான் கச்சேரிகள் செய்யப் போகும்போது என் சிஷ்யர்களையும் கூட அழைத்துக்கொண்டு போவேன். கச்சேரிகளில் பாடச் சொல்வேன். சிஷ்யர்களும் பிரமாதமாய்ப் பாடி, பாராட்டுப் பெறுவார்கள். தியாகராஜன் விஷயத்தில் தியாகராஜனின் அரியதிறமையை ரசிகர்களுக்கு அறிமுகப்படுத்திய சிறு பணி தான் என்னுடையது.

இரண்டாவது உலக யுத்தம் நடந்துகொண்டிருந்த நேரம். அவ்வப்போது 'இருட்டடிப்பு' உத்தரவு வரும். ஒரு கச்சேரி பண்ணிக் கொண்டிருந்தேன், தியாகராஜனுடன். நான் ஒரு பாட்டை ஆரம்பித்தபோது விளக்குகள் அணைந்து விட்டன. நான் தியாகராஜனுக்கு சைகை கொடுக்க தியாகராஜன் பாட்டைத் தொடர்ந்தான். ரசிகர்களுக்கு விளக்குகள் வந்ததும் விஷயம் தெரிந்து ஆச்சரியப்பட்டுப் போனார்கள். பாட்டுத் திறனிலும் சரி, குரலிலும் சரி, ரசிகர்களால் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியவில்லை!

1962ல் சங்கீதக்கல்லூரியில் லெக்சரராய்ச் சேர்ந்து பிறகு புரொபசராகி, வைஸ் பிரின்ஸிபாலாகி, 1978ல் மதுரை சங்கீதக் கல்லூரியின் பிரின்சிபாலாய் பொறுப்பேற்று தற்போது ரிடையராகிவிட்ட தியாகராஜனுக்கு மியூஸிக் அகாடமி விருது கிடைத்திருப்பது பற்றி எனக்கு மனப்பூர்வமான சந்தோஷம். தியாகராஜன் அமோகமாய் சங்கீதத் தொண்டு புரிந்து, பல்லாண்டு வாழ ஆசீர்வாதங்கள்.

பேட்டி: எஸ். சந்திரமௌலி
படம்: உத்ரா

○ டி. எம். தியாகராஜன்; செம்மங்குடி – சாமா வரைந்த கார்ட்டூன்





அந்த சங்கீதக் கலாநிதி வேறு யாருமல்ல; பெண் வேடத்தில் சிறுவன் டி.எம். தியாகராஜன் தான்!



# அரசவையிலே ஆர்ப்பாட்டம்!

ம.பொ.சி



**பா**ஞ்சாலி சூதில் வசப்பட்ட பின்னர் அவையிலிருந்த துரியோதனாதியர், ஒருவரையொருவர் கட்டித் தழுவியும், கால்களையும் கைகளையும் அசைத்துக் கூத்தாடியும் மகிழ்ச்சி கொண்டாடினார்களாம். சூதில் பாஞ்சாலியை வென்று தந்த மாமன் சகுனிக்கு துரியோதனன் நன்றி தெரிவிக்கிறான். அந்த மாமனை நெஞ்சோடு நெஞ்சு பொருந்த அணைத்துக்கொண்டு துரியோதனன் சொல்கிறான்:

என்துயர் தீர்த்தாயடா — உயிர் மாமனே!
  ஏளனம் தீர்த்துவிட்டாய்!
அன்று நகைத்தாளடா — உயிர் மாமனே!
  அவளை என் ஆளாக்கினாய்!
என்றும் மறவேனடா — உயிர் மாமனே!
  என்ன கைம்மாறு செய்வேன்!
ஆசை தணித்தாயடா! — உயிர் மாமனே!
  ஆவியைக் காத்தாயடா!
பூசை புரிவோமடா — உயிர் மாமனே!
  பொங்கல் உனக்கிடுவோம்!
நாசமடைந்ததடா! — நெடுநாட்பகை
  நாமினி வாழ்ந்தோமடா!
பேசவுந் தோன்றுதில்லை — உயிர் மாமனே!
  பேரின்பங் கூட்டிவிட்டாய்!

துரியோதனனுக்கு உடன் பிறப்புக்கள் 99 பேரல்லவா! அவர்களிலே விகர்ணன் தவிர மற்றுள்ள 98 பேரும் அண்ணன் அரவக் கொடியோனுடன் சேர்ந்து ஆனந்தக் கூத்தாடினர். கர்ணனுக்கும் தலைகால் தெரியவில்லை. சகுனி மாமன் மகிழ்ச்சி வெள்ளத்திலே மிதக்கிறான். ஆம்; அரசவையிலே ஒரே ஆர்ப்பாட்டம்! அதைப் பாரதியாரே வருணிக்கிறார் கேட்போம்:

திக்குக் குலுங்கிடவே — எழுந்திடுமாம்
  தீயவர் கூட்டமெல் லாம்
தக்குத்தக் கென்றே அவர் குதித்தாடுவார்
  தம்மிரு தோள் கொட்டுவார்
ஒக்கும் தருமனுக்கே இஃதென்பார், ஓ!
  ஓ!' வென்றிரைந்திடுவார்
கக்கக்கென் றேநகைப் பார் - 'துரியோதனா
  கட்டிக்கொள், எம்மை' யென்பார்,
மாமனைத் 'தூக்கா' என்பார் - அந்த மாமன் மேல்
  மாலை பலவீசுவார்.
'சேமத் திரவியங்கள் — பல நாடுகள்
  சேர்ந்ததி லொன்றுமில்லை;
காமத் திரவியமாம் — இந்தப் பெண்ணையும்
  கைவச மாகச் செய்தான்
மாமனோர் தெய்வ' மென்பார்—
  ''துரியோதனன்
  வாழ்க'' வென்றார்த்திடு வார்.

துரியோதனனுக்கு பாஞ்சாலியிடம் மோகமில்லை, கோபமிருந்தது. ஆம், ராசசூய யாகத்தின்போது, தான் வழுக்கி விழுந்த நேரத்திலே அவள் சிரித்து மகிழ்ந்தாள் என்பதுதான் கோபத்துக்குக் காரணம். அதற்கு மேல் தன் பகைவர்களான பாண்டவர்களின் தேவி என்பதற்காக அம்மாதரசியை மாபாவி துரியோதனன் பழிவாங்கவும் நினைத்தான்.

மாமன்னர் பாஞ்சாலன் மகளை மாவீரன் திட்டத்துய்மனுடைய உடன் பிறப்பை, பாண்டவர் தம் தேவியை, கனலில் பிறந்த கற்பரசியை அரண்மனையின் அந்தப்புரத்தினின்று தன்னுடைய அவையிலே கொண்டு வந்து நிறுத்த துரியோதனன் நினைத்ததுமே பிரபஞ்சம் முழுவதிலுமே குழப்பமேற்பட்டதாம்!

தருமம் அழிந்து விட்டது; சத்தியம் பொய்த்து விட்டது. பெருமைத் தவங்கள் எல்லாம் பெயர்கெட்டு மண்ணோடு மண்ணாகி விட்டன; வேதங்கள் தமக்குரிய பொருள்களை இழந்து வெற்றுரைகளாகி விட்டன. அழகிற் சிறந்தவர்கள் எனப் புராணங்களால் வருணிக்கப்படும் கந்தர்வர்களெல்லாம் களையிழந்து விட்டனர். வண்ணத் திருமாலும் தூங்காமல் தூங்கும் அறிதுயிலை விட்டு, ஆழ்ந்த துயிலெய்தி விட்டார்; சீதேவியான் முகம் பாழடைந்து விட்டது. பிறையணிந்திருந்த பெம்மானை மாதேவனின் யோகம் கலைந்து அவனுக்கு மதி மயக்கம் ஏற்பட்டு விட்டது. ஆதி பராசக்தி அருளுந் தன்மையை இழந்து விட்டாள். உலகனைத்துக்கும் ஒளி தருகின்ற சூரியனும் தெய்வத்தின் முகத்தே இருள் படர்ந்து விட்டது!

இவைபோன்ற குழப்பங்களை யெல்லாம் வர்ணிக்கிறான் பாரதி. ஒரு பத்தினிக்கு இழுக்கு நேருமானால் இயற்கைச் சக்திகளெல்லாம் தத்தமது நிலையிருந்து வேறுபட்டு விடும் என்பது பாரதியின் சித்தாந்தம்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani, Layout Artist: Kalpana, Editor: K. Rajendran




# போர்ஹென்ஸ் :ப்ளோரைடு ஈறுகளையும் பற்களையும் பாதுகாக்கிறது




## சுவைமிக்கது



## நுரை மிக்கது !

**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**



ஈறுகள் வலுவிழந்து மெத்
தென்று இருந்தால் ஆரோக்கிய
மான பற்கள்கூட ஆட்டம் கண்டு
விழுந்துவிடும். போர்ஹென்ஸில்
உள்ள விசேட சேர்க்கைப் பொருள்
(அஸ்ட்ரின்ஜன்ட்) ஈறுகளை
வலுப்படுத்தி ஈறு உபாதையை
எதிர்க்க உதவுகிறது.

**பற்களுக்கு :ப்ளோரைடு பாதுகாப்பு**



சிறுவர்களுடைய பற்களின் எனாமலை
:ப்ளோரைடு உறுதிப்படுத்துவதோடு
பற்களில் குழி விழுவதையும்
தடுக்கிறது. போர்ஹென்ஸிலுள்ள
:ப்ளோரைடு பெரியவர்களுடைய
பற்களின் எனாமலில், பற்சொத்
தைக்குக் காரணமான கிருமிகளை
எதிர்க்கும் சக்தியை வலுப்
படுத்துகிறது.

## :ப்ளோரைடு அடங்கிய
# போர்ஹென்ஸ்
## ஈறுகள் பற்கள் இரண்டையுமே பாதுகாக்கிறது




266 F-172 TAM

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka



# கல்கி

முதல் டெஸ்ட்டில் சிறப்பாகப் பந்து
வீசி இங்கிலாந்து ஆட்டக்காரர்
களின் ஆறு விக்கெட்டுகளை வீழ்த்
தியதுடன் 84 ரன்களும் எடுத்து
இந்திய அணியின் வெற்றிக்கு
உதவி, முதல் டெஸ்ட்டின் சிறந்த
ஆட்டக்காரர் என்ற விருதை
யும் தட்டிச் சென்ற கபில்தேவ்.

வண்ணப் படம் :